Koviloor Digital Library

# அகத்தியர் வைத்திய பூரணம் 205

## மற்றும் அதன் சுருக்கம் வைத்திய சூத்திரம் 21

(உரையுடன்)




பதிப்பாசிரியர்
ஆர்.சி. மோகன்

Acc.No: 44794
R 689

தாமரை நூலகம்
வடபழனி, சென்னை - 26.

Koviloor Digital Library

வெளியீடு எண் : 302
முதல் பதிப்பு : 1915
மறுபதிப்பு : செப்டம்பர் 2010
இரண்டாம் பதிப்பு நவம்பர் 2022

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அகத்தியர் வைத்திய பூரணம் 205 மற்றும் வைத்திய சூத்திரம் 21 |
| பதிப்பாசிரியர் | : | ஆர். சி. மோகன் |
| வெளியிட்டோர் | : | தாமரை நூலகம்<br>7, என்.ஜி.ஓ. காலனி, 3ம் தெரு<br>வடபழனி, சென்னை - 600 026.<br>தொலைபேசி : 2362 0249 |
| பதிப்பு ஆண்டு | : | நவம்பர் 2022 |
| உரிமை | : | பதிப்பகத்திற்கு<br>(மறு பதிப்பிற்கு மட்டும்) |
| நூல் வடிவம் | : | டெம்மி 1X8 |
| அச்சுத் தாள் | : | 14.4 வெள்ளைத் தாள் |
| எழுத்துக்கள் | : | 12 புள்ளி |
| மொத்தப் பக்கங்கள் | : | 101 |
| பிரதிகள் | : | 1000 |
| பைண்டிங் | : | செக்ஷன் |

**விலை : ரூ 65/-**

அச்சிட்டோர் : கிரியேடிவ் ஆப்செட்,
சென்னை - 600 034

Koviloor Digital Library

உ

குமரன்றுணை

பதினெண் சித்தர்களில் ஒருவராகிய

அகஸ்தியர் திருவாய்மலர்ந்தருளிய

# வைத்தியபூரணம் 205

அதன் சுருக்கம்

## வைத்திய சூஸ்திரம் 21



இஃது

**மதுரை, மு. குழந்தைவேலுப் பிள்ளை**

அவர்களால் பரிசோதிக்கப்பெற்று:

சுத்தப்  பதிப்பு



**மதுரைப் புதுமண்டபம் புத்தகஷாப்**

இ. ராம.

**குருசாமிக்கோனார்**

அவர்களாற்றமது

மதுரை வடக்குமாசிவீதி

ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது

Registered Copy Right

**1915**

இதன்விலை ]



KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 44794

Koviloor Digital Library

## பொருளடக்கம்

Koviloor Digital Library

Koviloor Digital Library

உ

கடவுள் துணை

அகஸ்தியர் திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய பூரணம் 205

## காப்பு

ஆதிமுதற் பூரணமாம் பொருளைப்போற்றி
அம்பிகையி னடிபகலு மல்லும்போற்றி
ஜோதிமிகுங் காரணசற் குருதாட்போற்றி
சொலற்கரிய நாதாக்கள் துணைதாட்போற்றி
வேதன்மகிழ் கலைவாணி சரணம்போற்றி
வேதாந்த விளக்கொளியின் கமலம்போற்றி
நாதமிகு மாறாதாரத்தாட்போற்றி
நளினமிகுங் கணபதிபூ ரணத்தாட்போற்றி

## பிணிக்குறிப்பு

பூரணமாய் மும்மூலம் பொறியிற்கூடாம்
புகையெழும்பி மேகத்தாற் சிரசிற்கூடாங்
காரணமாய் நீர்கலந்து கனரோகங்கள்
கனன்றெழுந்த வாய்வதனாற் சூலைரோகம்
வாரணமாய் வாதத்தி லெழுந்தரோகம்
மத்தியமாம் பித்தத்திற் கிராணியாச்சு
தாரணமாம் வாய்வதனாற் குன்மமாச்சு
சார்ந்திடவே சிலேற்பனந்தான் ஐயமதாமே. (1)

ஆமப்பா வாதத்தா லிரணமுண்டா
அஸ்தியினிற் சூடுகொண்டாற் சுரங்கள்காணுங்
காமப்பா லகிரியால் மேகமுண்டாங்
கைகடந்த போகத்தால் ரோகமாச்சு
தாமப்பா மேகத்தாற் பிறந்தரோகந்
தரணியினா லாயிரத்துச் சில்வாணந்தா
னோமப்பா மேகங்க ளிருபத்தொன்றா
லுகத்தில் நீரிழிவ துதித்தவாறே (2)

Koviloor Digital Library



வாறான பித்தத்தா லுஷ்ணரோக
மருவியதோர் வாதத்தாற் சீதரோகந்
தேறாத வையத்தாற் சுபரோகந்தான்
திரண்டெழுந்த வாயுவினால் மூன்றுமாச்சு
கூறான தசவாய்வு தொந்தங்கொண்டு
கொடிகனல் வாதமுடன் விந்துமாகி
ஏறாத விந்ததனிற் பிறந்தமேக
மெழுந்தபித்த சிலேர்ப்பனத்தி லிருந்ததாமே. (3)

ஆமிந்த நூற்குநிகர் சஞ்சீவியாகி
மறிந்தநூல் தனைப்பார்த்தாற் சித்தர்க்கொப்பும்
போமேகேள் நூல்கண்டால் நோய்களெல்லாம்
பொன்வெள்ளி ரண்டுமிந்த நூலுக்குள்ளே
நாமப்பா நுணுக்கத்தை யார்க்குச்சொன்னோ
நல்லோர்க்குத் தருமமது நாட்டவேணு
மோமிந்த நூல்பார்த்து வயித்தியஞ்செய்தா
லுத்தமனே பிர்மரிஷிக் கொப்பாங்காணே. (4.

காணப்பா மிக்கழு லிகையினாலே
கட்டான கிரதங்கள் சூரணங்கள்
பூணப்பா தைலங்கள் பற்பந்தானும்
பூட்டினேன் ரசாயனங்கள் கியாழத்தோடு
தோணப்பா சுளுவுமெத்த வுலகத்தோர்க்குச்
சொல்லவில்லை நூல்போலச் சுருக்கமில்லை
நாணப்பா வருணனைப்போற் செந்தூரங்கள்
நாட்டுகிறேன் வெகுலேசு நன்றாய்க்கேளே. (5)

கேளப்பா தைலங்கள் செந்தூரங்கள்
கெடியான சித்தருக்குஞ் சிவயோகிக்கும்
வாளப்பா வுலகத்திற் பண்டிதர்க்கும்
வழுத்தினே னிருநூற்றி யைந்தினுள்ளே
நாளப்பா சத்தியமாய் ரோகந்தீர
நாட்டினேன் முந்நூற்றி லசாத்யம்போக
வேளப்பா விந்நூலை வைத்துக்கொண்டு
வேணபடி வயித்தியத்தை விரும்பிச்செய்யே. (6)

செய்வதற்கு வெகுசூட்சஞ் சொல்லிவிட்டேன்
செகத்திலே பிழைப்பதற்கே யெளிதாமிந்நூல்
கைவசத்தில் வந்தமுதற் சிலவுமில்லைக்
கண்டுமற்றப் பெரியோர்க்கு மெளியோர்க்குந்தான்

Koviloor Digital Library



மெய்யிலுள்ள வினைகளெல்லாம் நீங்கிப்போக
வீண்சாஸ்திர மாய்ந்தவர்கண் மயங்கிப்போவார்
நெய்மிகுந்த பால்போலே செந்தூரங்கள்
நிகழ்த்துகிறே னிசமாகப் பற்பந்தானே. (7)

பற்பமா கின்றவகை யதனைக்கேளு
பாடினேன் பலநூலுட் காரசாரஞ்
செப்புகிறேன் மூலிகையி னீறிற்றானால்
சிட்டனுக்கு மனத்தெளிவு கனல்தான்கொள்ளா
தெப்போது முண்டுவரப் பயமேயில்லை
இந்நூலை எளிதாக வியம்பவேண்டாம்
நுப்பவகை யென்னூலிற் றப்பாதப்பா
நுணுக்கமாய்ச் செய்தொழிலி னுண்மைபாரே. (8)

## லோகபற்பம்

நுண்மைபெற அயத்தகடு நெற்கனந்தா
னுணுக்கமாய்ச் சரணகலஞ் சாண்தானீள்ம்
வண்மையாய் வீழிவேர் பலந்தானொன்று
வாடியே மெழுகுபோ லரைத்துப்பூசித்
தன்மையா யோட்டில்வைத்தே யோடுமூடிச்
சந்துவாய் சீலைசெய்து கெஜபுடத்தில்
உண்மையாய் வைத்திடவே பற்பமாகு
முயர்ந்ததிரு நீறுபோற் காணமென்னே. (9)

என்னவே யிதையெடுத்து வைத்துக்கொண்டே
எலுமிச்சம் பழமதனை நான்காய்க்கீறி
யன்னவே பழம்பத்துச் சட்டிலிட்டே
யதிலேதான் கையாஞ்சார் நாழிவாரு
பன்னவே காடியறு நாழிவிட்டுப்
பருவமா யவித்துலர்த்தி யெடுத்துக்கொண்டு
தின்னவே பணவிடைகள் கீற்றொன்றைத்தான்
றீருமடா பாண்டுவகை சேருநோயே. (10)

சேருநோய் குறைநோயுங் குட்டஞ்சூலை
தேனதனிற் கொண்டிடவே தீருந்தீரும்
பாருநோய் தீர்ப்பதற்குக் காந்தந்தன்னிற்
பற்பத்தைச் சொல்லுகிறேன் பணிவாய்க்கேட்பாய்

Koviloor Digital Library



யாருமே செய்வதற்குச் சிறியரநங்கை
யமுரிவிட் டிடித்திந்தச் சாற்றைவார்த்து
நீருதான் வற்றவற்ற வரைத்துமூன்று
நிசமாகப் பில்லைசெய்து ரவியில்வைத்தே (11)

வைத்தபில்லைக் காய்ந்தபின்போ ரோடுமூடி
வளமாகச் சந்துவாய் சீலைசெய்து
கைத்தபில்லை கெஜப்புடத்தி லீறிப்போகுங்
காந்தத்தின் பெருமைதனைக் காட்டொணாது
சத்தமுள்ள கிராணியொடு சோகைதீரச்
சொல்லுவோ மாதளங்காய்ச் சாறுவார்த்து
மெத்தெனவே சுக்குதனை யரைத்துக்கிண்டி
மிதமாகக் காந்தபற்பம் பணவிடைதான்கொள்ளே. (12)

கொள்ளவே மண்டலத்திற் றீரும்பாண்டு
கொடிதான ஜலக்கழிச்சல் பிறமேகங்கள்
தள்ளவே நீர்க்கிரிசிக் கனுப்பூரணங்கேள்
சஞ்சீவி சூரணத்தாற் சாந்தமாகும்
உள்ளபடி மூலமொடு கிராணிக்கெல்லா
முவேலாகபுற்பங் காந்தபற்ப மிரண்டிற்கூட்டி
வள்ளலே காந்தாரி சூரணத்தில்
வைத்திடவே தீரும்நோய் மகிழ்ந்துகேளே. (13)

## தாம்பரச் செந்தூரம்

கேளப்பா தாம்பரத்தின் துட்டுவாங்கிக்
கிருபையுடன் நெற்கனமாய்த் தகடுதட்டி
வேளப்பா வாடுதொடா மூலிவேரும்
வெண்ணொச்சி வேரிரண்டுஞ் சமனாய்ச்சேர்த்து
நாளப்பா குக்கில்பா லதனாலாட்டி
நலமாகத் தகட்டின்மே லப்பிப்பின்னுஞ்
சூளப்பா வோட்டில்வைத்தே யோடுமூடிச்
சுகமாகச் சந்துவாய்ச் சீலைசெய்யே. (14)

சீலையது மூன்றுசெய்து கஜெபுடத்திற்
சேர்த்திடவே யருணன்போற் செந்தூரந்தா
னாலையா குன்மமெட்டுந் தீரவேண்டி
யஷ்டசூ ரணத்துடனே தேனுங்கூட்டிக்

Koviloor Digital Library



காலையொடு மாலையினுங் கொள்வீராகிற்
 காணாது வாயுவர்க்க மெல்லாம்போகுஞ்
சூலையென்ற குன்மவகை தீரவேண்டிச்
 சுருக்காக ளிரசபற்பஞ் சொல்கிறேனே. (15)

## இரசபற்பம்

சொல்லுகிறேன் ரசந்தன்னைச் சுத்திசெய்து
 சுகமாகக் கரந்தைச்சார் விட்டேயாட்டி
அல்கிறேன் மூன்றுநா ளரைத்தபின்னை
 யடைபோலப் பிடித்ததனை யுலரவைத்து
மல்கிறே னோட்டினில்வைத் தோடுமூடி
 வளமாகச் சந்துவாய்ச் சீலைசெய்து
நல்கிறேன் குக்குடத்தில் மாண்டுபோகும்
 நலமான பணவிடையிற் சூலைபதினெட்டே (16)

பதினெட்டுக் குஷ்டமரை யாப்புக்கிரந்தி
 பரங்கிக்குப் பணவிடையிற் பனைவெள்ளத்தி
லெதிரிட்ட நோய்சயங்க ளெல்லாந்தீரு
 மிரைந்து நாட்கொள்ளு மிருநூறந்தான்
சதிரிட்ட மேகவகை தீரவேண்டிச்
 சாற்றுகிறேன் வங்கபற்பஞ் சார்ந்துநீகே
ளதிரிட்ட வெள்ளியக் கட்டிவாங்கி
 யப்பனே நெற்கனமா யடித்துக்கொள்ளே. (17)

## வெள்ளீய பற்பம்

அடித்திட்ட தகடதுவோ பலந்தானொன்றே
 யாடுதொடா மூலிவேர் பலந்தானொன்றே
துடித்திட்ட வெண்தோன்றிக் கிழங்குமொன்றே
 சுகமாக வரைத்ததனை மேலேயப்பி
வடித்திட்ட வோட்டில்வைத்தே யோடுமூடி
 வெண்மையாய் கெஜபுடத்தில் வெளுத்துநீறும்
வடித்திட்டே மேகவகை யிருபதுக்கும்
 வைத்திடவே பணவிடைதான் மருவிக்கொள்ளே. (18)

மருவியோதோ ராவிரைப்பஞ் சாங்கம்வாங்கி
 மைந்தனே தேன்விட்டு மத்தித்தேதா
னிருபொழுது கொண்டிடவே நீர்ச்சுரப்பு
 மியலான கல்லடைப்புக் கிரிச்சினங்க

Koviloor Digital Library



ளருவியென்ற சதையடைப்பு பிறமேகங்
ளனுப்பான மறிந்துசெய்தா லகன்றுபோகுங்
கருவியென்ற காரீயப் பற்பங்கேளு
கருதரிய நொச்சியிலை கவசமாக்கே. (19)

## காரீயபற்பம்

ஆக்கியதோர் வெள்ளீயப் பற்பம்போலே
யழகாகப் புடம்போட வெந்துநீறுந்
தூக்கியதோர் சூலையொடு குட்டந்தீருஞ்
சுனைப்புள்ளக் கிரந்திபிற மேகந்தீருந்
தேக்கியதோர் தேகத்திற் காந்தல்தீருஞ்
சீரற்ற நீர்க்கடுப்பு வரக்ஷிதீரும்
பாக்கியமாந் தேகத்தி லுஷ்ணமெல்லாம்
பறக்குமடா காரீயப் பற்பத்தாலே. (20)

## வெண்கலபற்பம்

பற்பமாம் வெண்கலத்தைச் சொல்லக்கேளு
பசளையிலை தனையரைத்துக் கவசஞ்செய்திட்
டர்ப்பமா யெண்ணாதே யோட்டில்வைத்தே
யழகாகக் கெஜபுடந்தா னறிந்துபோடு
நுற்பமாய் நீறியது வெள்ளையாகும்
நுணுக்கமடா பணவிடைநெய் தேனிற்கூட்டி
யுற்பனமாய்க் கொண்டிடவே சூலைபோகு
முறப்பான குன்மமுடன் வாய்வுதீரும். (21)

தீருமே ஜயரோக மிருமல்மாந்தை
சிவசிவா சொல்வேன்வெண் கலத்தினேர்மை
யூருமே யிருக்கின்றோர்க் கிந்நூற்கிட்டில்
யோகவான் வைத்தியத்துக் காதியாகும்
பாருமே யிம்முறையை யறிந்துசெய்தால்
பற்பத்தி னருமையெல்லாங் காணலாகு
மாருமே செய்வதற்கீ தறிந்துசொன்னே
னந்தந்த நூற்றேடி யலையவேண்டாம். (22)

Koviloor Digital Library



## துராப்பற்பம்

அலையாம லின்னமொரு சேதிகேட்பா
யாச்சரியந் துராவினுட வதிசயந்தா
ணிலையான தும்பையிலே யதனைப்பூசி
யிட்டுவிடு கஜபுடமே யோட்டில்வைத்து
நிலையான திராத்தகடு நீறிப்போகும்
நீர்க்கிரிச்சி வண்டுகடி சிலவிஷங்கள்
குலையான குன்மங்கள் ஜயரோகங்கள்
குஷ்டமொடு சூலைபதி னெட்டும்போமே. (23)

## பித்தளைபற்பம்

எட்டாத நில்வாகைச் சூரணத்தி
லினித்தேன்சேர்த் தொருநாளே யிருநேரந்தான்
முட்டாமற் பத்துதினங் கொள்வீராகில்
மோசமில்லை நோய்களெல்லா முறிந்துநீங்கும்
கட்டாத பித்தளையின் பற்பங்கேளு
காஞ்சொரியின் வேரரைத்துக் கனமாய்ப்பூசி
வட்டான வோட்டில்வைத்தே யோடுமூடி
வைத்திடுவாய்க் கெஜபுடத்தில் மாண்டுபோமே. (24)

மாண்டுபோம் நோய்கடனைச் சொல்லக்கேளு
வாய்வோடு குன்மமுதல் கிராணிமூலம்
பாண்டோடு நீர்ச்சுரப்பு வாய்நீரோடல்
பாய்கின்ற குடல்வாய்வு பார்சவாய்வு
ஆண்டதொரு வானந்த வாய்வுகொண்ட
வநுப்பான நோய்தனா லறிந்துகொள்ளும்
பூண்டநல்ல வொழுகறையைச் சொல்லக்கேளு
புகழான பற்பமொன்று புகலுவேனே. (25)

## ஒழுகறைபற்பம்

புகலுவேன் கஸ்தூரி யரைத்தேயப்பிப்
போட்டிடவே கெஜபுடத்திற் பொருமிநீறு
ஜெகதலங்கள் மெச்சுமடா விந்தநீறு
தேசத்திற் பண்டிதர்க்குக் கிட்டுமோசொல்

Koviloor Digital Library



அகலாத பாண்டோடு வீக்கஞ்சோகை
யப்பனே மகோதரநீ ராம்பலோடே
இகலாத நோய்தனுக் கநுப்பானங்கே
ளிட்டிடுவா யிஞ்சித்தே னிரண்டிண்ணாலே. (26)

## பால்கருடக்கல் பற்பம்

நாலான நாடனிலே வாங்கிப்போகு
நரைதிரை யில்லையடா நமனும்வாரான்
சோலாகச் சொல்லவில்லை பற்பஞ்செய்யத்
தொழிலாளி நீயானாற் செய்துபாரு
பாலான கருடக்கல் நீற்றக்கேளும்
பவிஷுகெட்ட பண்டிதனோ நீற்றப்போறான்
நூலான் நூற்களெல்லாம் பார்த்தாலென்ன
நுணுக்கமா யிந்நூலை நோக்கான்நாயே (27)

நாய்போலே திரிந்தலைவான் வைத்தியம்செய்ய
நளினமுள்ள வகையொன்று மறியமாட்டான்
பேய்போன்ற வுலகத்திற் பிணியைத்தீர்க்க
பெருநூற்கு முதல்வருமோ பேயரேகேள்
வாயான வானைப்புல் கிழங்கரைத்தே
யப்பியிடு கெஜபுடத்தி னீறிப்போகும்
நோயான வுஷ்ணரோ கங்களெல்லா
நுகரவே யிருநேரம் வெண்ணெயாமே. (28)

வெண்ணெயிலே தானருந்த கனரோகம்போ
மெய்யெல்லாங் குளிர்ச்சிதருந் தெளிவுண்டாகும்
எண்ணெயிலே தானருந்த கடுப்புந்தீரு
மெலும்புருக்கி யுள்வரட்சி யேகுமேகு
முண்ணயிலே யஸ்தியுட சுரமுந்தீரு
முள்ளுருக்கி யுள்ரோக முலர்த்தல்போகும்
பண்ணவே பால்கருடப் பற்பத்தாலே
பறக்குமடா வெட்டையெல்லாம் பாருபாரே. (29)

## கல்நார்பற்பம்

பார்ப்பதற்குக் கல்நாரின் பற்பங்கேளு
பகருகிறேன் சோங்கிலவம் பட்டைவாங்கி
பார்க்கவே யிடித்ததனை வைத்தேயாட்டிய
லதன்மேலே கன்னாரை நடுவேவைத்து

Koviloor Digital Library



வேர்ப்பொழியும் பட்டைபொடி மேலேபோட்டு
மேலோடு மூடியல்லோ சீலைசெய்து
மூர்க்கமாங் கெஜபுடத்திற் போடநீறு
மூதண்ட கன்னாரின் முறையைக்கேளே. (30)

முறையான பற்பத்தைத் தேனிற்கொள்ள
மூட்டோடே யசைந்தபல் லிறுகிப்போகு
மறையான சேட்டுமத்தை யறுத்துப்போடு
மகலாத உஷ்ணத்தை யடக்கிப்போடும்
பிறையான நாளொன்றுக் கிருபோதுண்ணப்
பேரான சயமிருமல் சுவாசகாசம்
நிறையான மந்தார காசமேகும்
நேரான தூதுளைலே கியத்திலென்னே. (3

## நாகபற்பம்

என்னவே நாகபற்பத் தியல்புகேளு
மெலியாலின் பாலிரைத் திடுகெஜந்தான்
பன்னவே ரவியுலர்த்தி யுணாயந்தபின்பு
பரிவாக வோட்டில்வைத்துச் சீலைசெய்து
முன்னமே சொன்னபடி புடத்திநீறு
மூதண்ட பற்பத்தின் முக்கியங்கேள்
வன்னமாங் கிராணியொடு மூலரோகம்
வயிறெரிவு நெஞ்செரிவு வாய்வுரோகம் (32)

வாயுவுட னிதற்கெல்லா மனுப்பானங்கேள்
வரிசையுடன் திரிகடுகு திரிபலாதி
தூயதிலே லகிரிகஞ்சா பொடித்துச்சேர்த்து
தோய்தேனிற் றூவிமெள்ளப் பதமாய்க்கிண்டி
நோயதனை யறிந்துண்ண மண்டலந்தா
னூற்பாக முன்சொன்ன ரோகந்தீரும்
பாய்கின்ற வெள்ளியுட பற்பங்கேளு
பாருற்ற ரூபாயை வாங்குவாயே. (33)

## வெள்ளிப்பற்பம்

வாங்கியே செம்முள்ளி யிலையரைத்து
மகிமையொடு கவசமதாய்ச் செய்துகொண்டு
தேங்கியே ரூபாயைக் குகையில்வைத்து
சிலவிட்டுச் சீலைசெய்து முழ[illegible]

Koviloor Digital Library



பாங்கியே யிட்டிடவே நீறிப்போகும்
படுபாவி வெள்ளியது பற்பமாச்சே
யோங்கியே சிமிளுக்குட் பதனஞ்செய்தே
யுறவுகெட்ட குன்மமுட நீர்க்கட்டெல்லாம். (34)

நீர்க்கட்டுச் சதையடைப்பு மயக்கமோடு
நெஞ்சிலுள்ள கபமெல்லா நீங்கிப்போகு
மூர்ச்செரியு மூச்செல்லா மடங்கிப்போகு
மூக்கிலுள்ள நீர்ப்பாச்சற் பீனிசங்கள்
பார்மண்டை சூலையொடு புரைகள்புண்கள்
பதுங்கிவிடும் வெள்ளியுட மகத்துவந்தான்
ஆரிந்த பற்பத்துக் கனுப்பானங்கேள்
ஆஆஆ வமுக்கிராகூ ரணந்தானாமே. (35)

## தங்கபற்பம்

ஆமிந்தத் தேனிலிடு மண்டலந்தா
னகலாத நோய்களெல்லா மகன்றுபோகு
மோமிந்த தங்கபற்பஞ் சொல்லக்கேளு
முறுதியுள்ள தங்கக்கா சதனைவாங்கித்
தாமிந்தப் பனிநாக்கி மூலிதன்னைச்
சாந்துபோ லரைத்தப்பி யோட்டில்வைத்து
வாமிந்தச் சந்துவாய்ச் சீலைசெய்து
வைத்திடவே கெஜபுடத்திற் பற்பமாச்சே. (36)

ஆச்சிந்தப் பற்பத்தை எடுத்துக்கொண்டே
யளவிறந்த வித்தைதனை யாடுஆடு
பாச்சிந்த வகையறிந்து வேதைதன்னை
பாய்ச்சினா லேழுரைத்தான் காணுங்காணும்
வாய்ச்சிந்தச் சொர்ணபற்ப வியாதிக்கெல்லாம்
வகையறிந்தே யநுப்பான மறிந்துகூட்டுக்
காய்ச்சிந்த வநுப்பானஞ் சொல்லக்கேளு
கண்டாத்திரி லேகியத்திற் கொண்டிடாயே. (37)

கொண்டாக்காற் சேட்டுமங்க டொண்ணூற்றாறுங்
குடிபோறோ மென்றுசொல்லி கூட்டோடேபோங்
கண்டாக்கால் சயரோகங் காசரோகங்
கபமீளை யுண்மாந்தைக் கட்டோடேபோம்

Koviloor Digital Library



உண்டாக்காற் றிரிகடுகு லேகியத்தி
ஓறவுகெட்ட குன்மமொடு மகோதரங்கள்
சென்றாக்கால் வாயுநீ ராம்பல்சூலை
சிரசுநோய்க் கண்ணோயுந் தீரும்பாரே. (38)

தீருமே குட்டமொடு குறைநோயெல்லாந்
திறமாக லேகியத்திற் கொண்டிட்டாக்கால்
பாருமே சூலையொடு கிரந்திகுட்டம்
பறக்குமே தேனிலிரு பதுநாளுண்டாற்
றேருமே நீரிழிவு பிரமேகந்தான்
றெளிவாகச் சீந்திற்சூ ரணத்திலுண்ண
வாருமே நெல்லிக்காய் லேகியத்தில்
வைத்துமெள்ளக் கொண்டிடவே பித்தம்போமே. (39)

போகுமே சிவவேம்பின் சூரணத்திற்
புகட்டவே புண்புரைகள் சிலவிஷங்கள்
ஆகுமே வண்டுகடி விஷங்களெல்லா
மாச்சரியம் வேம்பின்சூ ரணத்திற்கொள்ள
வேகுமே வாதமென்ற வெண்பதுந்தா
னெடுத்தடுத்த நோய்களெல்லா மேங்கிப்போகும்
வாகுமே யனுப்பானம் அறிந்துசெய்தால்
வருகின்ற நோய்தீருஞ் சொர்ணமாமே. (40)

சொர்ணமது தின்றாக்காற் சொர்ணம்போலாஞ்
சுகமாக விரும்புதின்றா விரும்புபோலா
மற்பமா மன்னமுண்டா லழுந்திப்போகு
மாசையது மிகுந்தாக்காற் பிறவிதீரா
வர்ணமது பிரிந்தாக்கால் வலுமைபாழா
மானிலத்தி லிருந்தாக்காற் றவசுபாழாம்
வர்னபொன்னை மறந்தாக்கா லெந்தப்போக்கு
மாகாதிவ் விதமாகப் பொன்னைநீற்றே. (41)

## கந்தகபற்பம்

நீற்றுதற்குப் பின்னுமொரு சேதிகேளு
நேராக கெந்தகத்தின் பற்பஞ்சொல்வே
னேற்றுகின்ற சின்னிதனை யேயரைத்தே
யெலுமிச்சங் காயளவாய்க் குகையேசெய்து

Koviloor Digital Library



தோற்றுகின்ற ரவியதனிற் காயப்போட்டுச்
சுகமாக வுலர்ந்தபின்பு சொல்லக்கேளு
சாற்றுகின்ற கெந்தகத்தின் கட்டிவாங்கித்
தளமான குகைகுள்வைத்துச் சில்லுபோடே. (42)

இல்லிட்டுச் சீலைசெய்து குக்குடத்தில்
தீர்ந்தாறி யெடுத்துப்பார் ஜெயபற்பந்தான்
மல்லிட்டு வாதாடி வந்தநோய்கள்
மயங்கியே யோடுவதற் கருப்பாணங்கே
ணெல்லிட்ட நெல்லிடைதான் றேனிற்கொள்ள
நிலையான குஷ்டமொடு குறைநோயெல்லாம்
பல்லிட்டுக்கடித்ததொரு சிலவிஷங்கள்
பாரித்த வாய்வோடு வாதம்போமே. (43)

வாதத்தி னாலெழுந்த கிரந்திசூலை
வயிற்றுவலி நீர்ப்பொருத்த மகோதரங்கள்
சூதத்தால் வந்ததொரு கற்பரோகஞ்
சுழற்றியே யாற்றிவிடுங் கண்டாற்போலே
பாதத்தில் வீக்கமுள்ள பாண்டுரோகம்
பறக்குமப்பா பற்பத்தாற் பாருபாரு
தாதுற்ற விடுப்புவலி சந்துவாதந்
தசையிலுள்ள நீரெல்லா மற்றுப்போமே. (44)

## மண்டூரபற்பம்

அத்ததொரு மண்டூர பற்பஞ்சொல்வே
னதிகமாஞ் சொரிசுணங்கை யரைத்துப்பூசி
வைத்திடவே மண்குகையில் சில்லுப்போட்டு
வளமாக சீலையொன்று வாயில்செய்து
பத்தியுடன் கெஜபுடத்திற் கூகைநீரின்
பரிவதுபோல் கண்மணியே நீறிப்போகும்
புத்தியுட னிதையெடுத்து வைத்துக்கொண்டு
புனிதமாய்த் தேனதிலே பொசித்திடாயே. (45)

பொசித்திடவே பணவிடைதான் றேனிற்கொள்ளப்
போரற்ற பாண்டுவகை பொல்லாவீக்கம்
நசித்திடவே பண்ணுவிக்கு மண்டூரந்தா
ணாடாது சயரோக மந்தாரகாச

Koviloor Digital Library



முசித்திட்ட விஷப்பாகம் விஷநீரெல்லா
மூட்டோட பிடுங்கிவிடு மூர்க்கமெத்த
வுசித்திட்ட வஞ்சனக்கல் பற்பஞ்சொல்வே
னொருபிடியாஞ் சிறுகீரை குகையைப்பண்ணே. (46)

## அஞ்சனக்கல் பற்பம்

பண்ணியந்த வஞ்சனக்கல் நிறையவிட்டுப்
பரிவான மூலிகையை யரைத்துமூடி
யொண்ணியமண் சீலைசெய்து கெஜபுடத்தி
லுறுதியுள்ள சங்கதுபோல் நீறிப்போகுந்
தண்ணியிலே போட்டவுடன் மிதக்கும்பாரு
ஜலமான மேகவகை யிருபதுக்கு
மெண்ணியே தேனிலிடு வியாதியானா
லென்னசொல்வேன் நீர்போன போக்குத்தானே. (47)

## தாளக பற்பம்

போக்கான தாளகத்தி னீற்றைச்சொல்வேன்
புதியதலை யோடதனைப் பொடித்துக்கொண்டு
நீக்கான சுண்ணாம்புத் தண்ணீர்விட்டு
நினைவாகத் தாளரைத்துக் குகைபோற்பண்ணி
வாக்கான மேல்மூடி யொன்றுசெய்து
வண்மையாய்க் காயவைத்தே யதனுட்கேளு
பாக்கான தாளகத்தின் கட்டிவைத்துப்
பரிவாகச் சீல்மண் செய்துலர்த்தே. (48)

உலர்ந்தபின்பு குக்குடத்தி னீறிப்போகு
முத்தமனே தாளகத்துக் கொப்புமுண்டோ
மலர்ந்ததொரு மல்லிகைப்பூ போலாம்வெள்ளை
மாகும் நீரதனை வைத்துக்கொண்டே
யலர்ந்தமலர்த் தேனதிலே கொள்வீராகி
லரிதான சயரோக மந்தாரகாசங்
கலந்தகப முள்மாந்தை யிருமலீளை
கரைகடந்தே யோடிப்போங் கண்டுகொள்ளே. (49)

கண்டுகொண்டே யநுப்பான மறிந்துசெய்தாற்
காணாத கடிவிஷமுங் குறைநோய்குஷ்டம்
வண்டுகடி யெலிவிஷங்க ளெல்லாந்தீரு
மைந்தனே யநுப்பான மறிந்துபோடு

Koviloor Digital Library



பண்டான ஜாதிலிங்கந் தன்னைநாளும்
பற்பமாய் நீறுகிற பண்ணைப்பாரு
எண்டிசையி லுள்ளவரா னீற்றப்போமோ
யெவருமெய்க்க நீறதனைச் செய்யக்கேளே. (50)

## ஜாதிலிங்க பற்பம்

செய்ததொரு ஜாதிலிங்கக் கட்டிவாங்கிச்
சிவமூலி வேர்பட்டைக் குகையைச்செய்து
வெய்யதொரு கட்டியதில் வைத்துமூடி
விதமுடனே சந்துவாய்ச் சீலைசெய்து
பையவே குக்குடத்தி னீறிப்போகும்
பரிவுடனே நிறுத்துப்பா ரிடைதான்போகா
துய்யவே நோயெல்லாந் தீரவென்றாற்
றுரையான வநுப்பான மொன்றுகேளே. (51)

## வேறு

ஒன்றுதான் தேனிற்கொள்ள வுறுதியாங் குன்மவாய்வு
பண்டுள்ள ஜன்னிவாதம் பூரிச வாய்வுசூலை
என்றிடு மீளைதன்னோ டிளைப்பதும் விரைந்துபோகு
மூண்டிடு மனுப்பானங்க ளுகந்துநீ கண்டிடாயே. (52)

## வீரபற்பம்

உகந்திடு வீரபற்ப முரைக்கிறே னுறுதியாக
ஜெகந்தனி லப்பையின்றன் கிழங்கினைக் குகைபோற்செய்தே
இகந்தனில் வீரந்தன்னை யிசையவே யதனுள்வைத்துப்
பகர்ந்திடுஞ் சில்லுமூடிப் பாகமாய்ச் சீலைசெய்யே. (53)

செய்யது குக்குடத்தில் தீர்க்கமாய் நீறிப்போகு
மெய்யவே பணவிடைதா னியல்புடன் றேனிற்கொள்ள
வையது சூலைகுன்ம மகன்றிடும் வாய்வுபோகு
மெய்யிது சொன்னேன்காரப் போக்கினை விரைந்துகேளே (54)

## பொரிக்கார பற்பம்

விறைந்திடும் பொரிக்காரத்தின் கட்டியை மதித்துவாங்கி
யுறைந்திடுஞ் சங்கைநீற்றி யுகந்துநீர் விட்டரைத்து
நிறைந்திடும் குகையாய்ப்பண்ணி நேர்ப்பொரிக் காரம்வைத்துக்
குறைந்திடுஞ் சீலைசெய்து குக்குடம் வைத்திடாயே. (55)

Koviloor Digital Library



வைத்திடக் காரநீறும் வளமிதற் கநுப்பானங்கே
ணித்தமுந் தேனிற்கொள்ள நீர்க்கடுப் புடனேமாறு
மெத்தென ஜலமிரங்கு மிசைந்தகல் லடைப்புந்தீரும்
துத்திடுஞ் சதையடைப்புத் துறந்துநீர்த் தோஷம்போமே. (56)

## சாஸ்திரபேதி பற்பம்

போமென சாஸ்திரபேதி புகல்கிறேன் புனிதமாக
வாமென முலைப்பால்விட் டே யவ்விடை யெருக்கம்பாலா
லாமென நாலுஜாம மதித்தரைத் துண்டைசெய்து
நாமென குக்குடத்தி னுட்டிட நல்லநீறே. (57)

நல்லதோ ரந்நீர்தன்னை நாட்டுவா யிஞ்சிச்சாற்றில்
வல்லதோர் சுரமுந்தீரு மருவிய பாலிற்கொள்ள
முல்லையின் கையினாளே முழங்கியு சுரங்கள்போகும்
வெல்லதோ ருஷ்ணமெல்லாம் விலகிடும் வெண்மைதானே. (58)

## வெண்குந்திரிக்க பற்பம்

வெண்மைகுந் திரிக்கநீற்றை விளம்புவேன் விரைந்துகேளு
பண்ணியின் பாலைவிட்டுப் பரிந்தரைத் துண்டைசெய்தே
யண்ணலே யோட்டில்வைத்தே யதின்மேலே யோடுமூடி
மண்ணது சீலைசுற்றி வைத்திடு குக்குடத்தில் (59)

குக்குடந் தன்னிற்றானே கூகைநீ ரொப்பதாகு
மிக்கநீ றதனைவெண்ணெய் தன்னிலே யருந்துவீரேல்
தக்கபற் கடுப்புரத்தந் தானது பறந்துபோகுஞ்
சிக்குள்ள புண்ணுந்தீறுஞ் சிந்தையி லுன்னிப்போடே. (60)

போடவே பல்லினோவும் புண்ணெனு மனைத்தினோடுஞ்
சூடது கொண்டபுண்ணுஞ் சூலையின் ரணங்கள்போகு
மாடிடுந் தந்தமெல்லா மாணிபோ லுறுத்துநிற்குஞ்
சேடுவெண் குந்தரிக்கஞ் செய்திடுந் திறங்கடானே. (61)

## பவழ பற்பம்

திறந்திடும் பவழபற்பஞ் செய்கிற திறந்தான்கேளு
சிறந்ததோர் முயலின்ரத்தந் தீர்க்கமாய் விட்டேயாட்டிக்
குறைந்திடா பில்லைசெய்து குலாவியே யோட்டில்வைத்து
மறைந்திட வோடுமூடி வைப்பாய்குக் குடத்திற்றானே. (62)

Koviloor Digital Library



தானது நீறிவெள்ளைச் சதுர்முகன் போலேயாகு
மானதோர் நீரதன்னைப் பணவிடை யநுப்பானங்கே
ளேனமாந் தேனினோடு தூதுளை நீரிற்கொள்ள
மானமாங் குழலினாளே சயங்கப மகன்றுபோமே. (63)

அகன்றிடு மிருமற்காச மதிகமாம் பவழபற்பம்
புகன்றிடப் போகுமப்பா புனிதமா மிந்தநீற்றைச்
செகந்தனிற் செய்யமாட்டார் செப்பினே னுலகத்தோர்க்கு
நிகண்டது போலாநூலை நுணுக்கமாய் நிகழ்த்தினேனே. (64

நிகழ்த்தினே நுணுக்கமாக நினைவொடு பவழபற்பஞ்
செகத்தினி லாருங்காணார் செப்பினேன் சூட்சமாக
அகத்தினி லிருந்துகொண்டே யாடலாங் கோடிவித்தை
மகத்துவ மிந்நூல்போல வைத்தியங் கண்டிலேனே. (65)

## வைரபற்பம்

கண்டதோர் வைரந்தன்னைக் கருத்துட னுரைக்கக்கேளு
பெண்டுகள் சுரோணிதத்தைப் பேணிவார்த் தரைத்துப்பில்லை
நன்றதாய்ச் செய்துலர்த்தி நாடியே யோட்டின்மூடி
சென்றிடக் கெஜபுடத்தில் தீர்க்கமாய் நீறிப்போமே. (66)

நீறிய நீரதன்னை நினைவதாய் தேனிற்கொள்ள
ஊறிடுந் தேகமெல்லா முற்றதோர் வைரம்போலா
மாறிடு மேனியெங்கும் வச்சிர காயமாகுங்
கூறிடும் ரத்தமெல்லாங் கட்டியாய் நீற்றக்கேளே. (67)

## இரத்னபற்பம்

கேளது பவழப்புத்தை கெட்டியா யரைத்துக்கொண்டே
யாளது குகையாய்ப்பண்ணி யதினுள்ளே வைரம்வைத்துச்
சூளது சில்லுபோட்டுச் சுற்றியே சீலைகட்டி
நாளது குக்குடத்தி னாட்டிட நீறிப்போமே. (68)

போமது நீறிற்றானால் புவியினிற் காட்டவொண்ணா
தாமஃதி ரத்னநீறு மதிகமாய்ச் சித்தர்செய்வார்
நாமது திறந்தசொன்னோம் நாட்டினின் மனுவோர்க்காக
வோமிதுக் கநுப்பானங்க ளறிந்திட வுறுதியாமே. (69)

Koviloor Digital Library



உறுதியா மிந்தநீற்றா லொழிந்திடும் வியாதியெல்லா
மறுதியாம் பாஷாணத்தி னீரதை யறையக்கேளு
சுருதியா மண்டத்தோட்டைச் சுண்ணமா யூதிக்கொண்டு
கருதியே குகையாய்ச்செய்து கட்டியைப் பேணிவையே. (70)

## பாஷாணபற்பம்

பேணியே வைத்தபின்பு வெள்ளேறுக் கதனைப்பேசி
வாணியா பாலைவிட்டே யதின்மேலே சில்லுப்போட்டுப்
பூணியே சீலைசெய்து குக்குடம் புடமதாக
[illegible]ணியே யிடுவாயானால் மாசற்ற பற்பமாமே. (71)

பற்பத்தி னிடையே சூதம் பாச்சியே முலைப்பால்விட்டு
நற்புட னரைத்துபில்லை ஞயம்பட வுலர்த்திக்கொண்டே
யுற்பன வோட்டில் வைத்தே யுபாயமாய்ச் சீலைசெய்து
கற்பகக் களிற்றைப்போற்றிக் குக்குடங் கருதிக்கொள்ளே (72)

கொள்வது நீற்றை நன்றாய்க் கூறுவேன் வெள்ளீயத்தி
லள்வது பதந்தனக்குப் பணவிடை வீதமாக
வுள்வது வுருகும்போது கொடுத்திட வுரிந்துகொள்ளு
மெள்வது துய்யரூபாய் விலையதற் கதிகந்தானே. (73)

தானென சுரத்துக்கெல்லாம் பாலினிற் றாக்கினாக்கா
லூனென நாழிகைக்குள் குளிர்[illegible]ப்போகும்
நீரென விந்தநீற்றை நாட்டினி லுரை[illegible]ணாது
பானென தெளிந்தநூலைப் பத்திரப் படுத்திவையே. (74)

## சாரநீறு

வைத்திடுஞ் சாரநீற்றை மைந்தனே மகிழ்ந்துகேளா
யெடுத்திடும் புளியஞ்சாம்ப லெடுத்ததை யுப்பாய்க்காச்சி
சுத்திடுங் குப்பைமேனிச் சாறுவிட் டரைத்துநன்றா
யத்திடும் குகையுண்டாக்கி யதினுள்ளே வைத்துமூடே. (75)

மூடியு மதனாற்செய்து முசியவே சீலைகட்டி
யாடிடக் குக்குடத்தி லழகதாய் நீறுநீறுந்
தேடினாற் கிடையாதிந்தச் செகந்தனிற் சாரபற்பம்
வாடிடும் வாதியேகேள் வகையுட னீற்றுவாயே. (76)

Koviloor Digital Library



வாயது பேசினாக்கால் வாய்க்குமோ சாரநீறு
நோயது கொண்டவாதி சாரத்தி னுணுக்கங்கேளு
காயது நாகந்தானுங் கண்டிறந் தாடிச்சாகும்
பேயது கொண்டவாதி பேசாதே பேணிப்பாரே. (77)

பாருள்ள நோய்கடீரப் பாய்ச்சிடு தேனிலேதான்
சீருள்ள மகோதரங்கள் வாயுவின் றிரட்சியோடு
நீருள்ள வாம்பல்வீக்க நிட்சய கர்ப்பரோக
மூருள்ள குன்மமெல்லா மோடிடு மூலகத்தோர்க்கே. (78)

## உப்புப் பற்பம்

உலகத்தி லுப்பினீற்றை யுரைக்கிறே னுறுதியாகச்
சிலம்பெற்ற லவணந்தன்னைச் சிதந்தவோர் கட்டிவாங்கி
மலைபெற்ற வன்னிப்பட்டை யிடித்ததை மாவதாக்கி
நிலைபெற்ற வோட்டிலிட்டு நேர்ந்துப்பை நடுவேவையே. (79)

வைத்ததோர் கட்டிமேலே வன்னிதன் பட்டைத்தூளை
யுத்ததோர் கீழ்மேலிட்டே யோட்டின்மே லோடுமூடி
முத்தவே சீலைசெய்து முன்புடங் கோழியிட்டே
யத்தபின் னெடுத்துப்பார்க்க வதிகமாம் பற்பமாமே. (80)

அதிகமாம் பற்பந்தன்னை யருந்திடத் திசைவாய்வெல்லாம்
பதியைவிட் டோடிப்போகும் பாரிச வாய்வுசூலை
கதிகெட்ட மகோதரங்கள் கனத்திடு நீர்தோஷங்கள்
மதிகெட்டே யோடிப்போகு மகிழ்வதற் கின்னமுண்டோ. (81)

உண்டென வுரைத்தசெய்தி யுறுதியாய்ச் சொல்லக்கேண்மி
னண்டர்கள் போலாமிந்த வதிசய முப்புநீறு
தெண்டிசை முழுதும்வாழச் செப்பினேன் பற்பந்தன்னை
யுண்டிட வெள்ளிச்செம்பிற் களஞ்சதற் கொருமாவீயே. (82)

ஈய்ந்திட வயதைந்தாகு மெடுத்திட வாணிக்கெல்லாந்
தேய்ந்திட வறுத்தாயானாற் றெளிந்திடுந் தங்கமாகுங்
காய்ந்திடுங் கசடருக்குக் காட்டாம லிந்தநூலை
யாய்ந்திடும் பெரியோர்க்கீந்தா லறம்வரு மதிகமாமே. (83)

Koviloor Digital Library



## ஆமையோட்டினீறு

ஆமையோ டதனைநீற்ற வருடனைச் சொல்லக்கேளு
பூமிவேர் தனையரைத்துப் பொருந்திடக் கவசஞ்செய்தே
யாமிதை யதனுள்வைத்தே யழகதாய்ச் சில்லுப்போட்டுத்
தாமுமே குக்குடத்திற் றாக்கிடத் தவளநீறே. (84)

தவளமா நீற்றலான சகஸ்திர பிராணிநீற்றைக்
கவளமாய்த் தேனிலிட்டாற் கண்கணோய்த் தொண்ணூற்றாறு
மூவளமா யோடிப்போகு மூசல்கண் ரோகந்தீரும்
பவளமா மிந்தபற்பம் பாரினி லதிகந்தானே. (85)

## முத்துநீறு

தானெனு முத்துநீற்றைச் சாற்றுவேன் றரணியார்க்கு
மானெனு மண்டநீரால் மகிழ்ந்தரைத் துண்டைசெய்து
நானென வோட்டில்வைத்து நாடியேசீலைமூடி
வானென குக்குடத்தில் வைத்திடச் சுண்ணமாமே. (86)

சுண்ணமா முத்துநீற்றை வெற்றிலை தன்னிற்பூசி
யன்னமே தாம்பூலத்தை யருந்திட வதிகமாகு
முன்னமே பல்லிறுக்குஞ் சிலேற்பன முழுதுந்தீரும்
வன்னமாந் தேகத்துக்கு வாய்த்திடுஞ் சுண்ணமாமே. (87)

## கர்ப்பூரநீறு

வாய்த்திடும் பிறமேகங்கள் வந்தநீ ரழிவுதீருஞ்
சாய்த்திடுங் கற்பூரத்தைச் சாற்றுவேன் சுண்ணமாக்க
காய்ந்தகற் பூரவள்ளிச் சாரது வார்த்தரைத்துத்
தோய்த்திடும் வட்டதாக்கி ரவியினிற் காயச்சொல்லே. (88)

சொல்லிய வட்டவோட்டில் துலங்கவைத் தோடுமூடி
நல்லதோர் சீலைசெய்து நாட்டியே புடந்தான்கோழி
மெல்லியே யெடுத்துப்பார்த்தா லியலுள்ளச் சுண்ணமாகும்
வல்லிவெற் றிலையிற்றின்றால் வச்சிரகாயமாமே. (89)

காயமும் வலுத்துப்போகுங் கசடது மற்றுப்போகும்
வாயினில் ரோகந்தீரும் வருந்திய கபமுமேகு
மாயமாம் வாய்வுபோகு மலசலக் கட்டுந்தீரும்
நேயமாய்க் கண்துலங்கும் நிச்சய மிதுசொன்னேனே. (90)

## துரிசிபற்பம்

Koviloor Digital Library



நிச்சய மாகச்சொல்வே னீலமாந் துரிசிப்போக்கு
வைச்சதோர் வங்கத்தோடே யிடைக்கிடை சூதம்வார்த்து
மெச்சுமந் திடைக்குநல்ல வெடியுப்பும் கூடக்கூட்டி
யுச்சவாய் நீரினாலே யுறவரைத் துலர்த்திவிட்டாய். (91)

வட்டமா யோட்டில்வைத்து வளையவே சீலைசெய்து
திட்டமாய்க் குக்குடந்தான் றீர்ந்திடச் சுண்ணமாகு
முட்டவே சிவந்துபோனால் முறைப்படி யுப்பைக்கூட்டிச்
சட்டமா யரைத்துமுன்போற் புடமிடச் சுண்ணமாமே. (92)

சுண்ணத்தை வாய்நீராலே சுழற்றியே யரைத்துக்கொண்டே
யன்னத்தைத் துரிசிக்கட்டிக் கப்பியே ரவியிற்போட
முன்னொத்த மூன்றுநாளில் முழுவெள்ளையாகும்பாரு
பொன்னொத்த சீலைசெய்து போற்றிடு காடையென்றே. (93)

என்றிதை யெடுத்துப்பார்க்க வியலுள்ளச் சுண்ணமாகுங்
கண்களாற் கண்டபேர்க்குங் கலியெலா நீங்கிப்போகும்
பண்டிதை ரசத்திற்குக்கால் பணவிடை தாக்கினாக்கா
லுண்டது கொண்டுபோமே யுறுதியாம் வாய்நீராலே. (94)

வாயினி லுமிநீராலே மத்தித்தே யுருட்டிமெள்ள
காயினி லுமியோட்டுள்ளே கரியினி லுருக்கிக்கொண்டு
வாயினி லாயிபாதந் தன்னையே வணங்கிநித்தங்
காயினி லிதனைக்கொண்டே யாடலாங் கோடிதானே. (95)

கோடியென் றுரைத்தேன்கேளாய் கோடியு மிதற்குள்ளாகும்
வாடியே மயங்கவேண்டாம் வைத்திடு துரிசிச்சுண்ணந்
தேடினாற் கிடையாதப்பா தெருவெல்லாங் கிடைக்குமோசொல்
பாடியும் படித்துமென்ன பாரினி னூற்கிட்டாதே. (96)

கிட்டாமற் போனதேதோ கிடைத்தவர் கொடுக்கமாட்டார்
கட்டாகத் தந்தபேர்கள் காலினில் விழுந்துபோற்றுச்
செட்டாக விருக்கலாகா திரவியஞ் செய்வதென்ன
முட்டாளாய்ப் போகாமற்றான் முறையதாய்க் குருவைவாங்கே. (97)

Koviloor Digital Library



## பொன்னிமிளைபற்பம்

வாங்குபொன் னிமிளைபற்பம் வளமதாய்ச் சொல்லக்கேளு
காங்கிய வரசன்பட்டை தூளதா யிடித்துக்கொண்டு
காங்கிசை கீழ்மேலிட்டுக் கட்டியை நடுவேதூக்கி
ஓங்கியே யோட்டில்வைத்தே யதன்மேலே யோடுமூடே (98)

மூடியே சீலைசெய்து முக்கியமாய் கெஜபுடத்திற்
சாடியே நீறிப்போகுந் தவளம்போல் வெண்மையாகுங்
கூடிய வாய்வுரோகங் குலைகுலைந் தோடிப்போகும்
நீடிய குன்மமெட்டும் நிலைகுலைந் தேகுங்காணே. (99)

காணவே சூலைக்கட்டு கண்டவிப் புருதிமாலை
யூணரை யாப்புபுத்துக் கோகோநெய் தேனிற்கொள்ளு
தோணவே தங்கநீறைச் சுளுவாக வென்றுசொல்வேன்
நாணவே சூரிவித்தை நாவினி லுமிநீராலே (100)

## தங்கப்பற்பம்

நீரினா லரைத்துத்தங்கக் காசுமே பொருந்தியோட்டில்
தாரியே வைத்துமூடிச் சந்துவாய்ச் சீலைசெய்தே
யூரினாற் கெஜபுடத்தி லுயர்த்தியாய் நீறிப்போகும்
பேரினா லிந்தநீற்றைப் பேசொணா தறிந்தபேர்க்கே. (101)

## வேறு

பேர்க்கென்ற வகையேது சொல்லக்கேளு
பெயர்கெட்ட வுலகுக்குப் பொருளேகாணு
மாக்கென்ற தங்கபற்ப மொருமாவாக
வப்பனே ரவிமதியி லீந்தாயானால்
ஊக்கென்ற விராகனுக்கே யதிகங்காணு
முறப்புள்ள தங்கமடா யிந்தப்போக்கு
நாக்கென்ற சரச்சோதி நிருத்தஞ்செய்வாள்
நாதாக்கள் செய்கின்ற வித்தைதானே. (102)

வித்தையென்ற வித்தையெல்லா மிருநூற்றுள்ளே
விருதுகட்டி வெட்டுதற்குச் சுளிவுமெத்த
சுத்தென்ற சுத்தெல்லாம் விட்டுப்போட்டுச்
சுளுவான வித்தைதனை யாடித்தேறு

Koviloor Digital Library



பத்தென்ற நூறும்து முகிந்தவாறைப்
பாடினே னின்னமொரு நூறும்பாரு
முத்தென்ற முத்துபோல் மூலிபோக்கு
முக்கியமாய்ச் சொல்லுகிறேன் முறையைப்பாரே. (103)

முறையான ஏகமூ லிகையினாலே
முக்கியமா யெண்ணெயொடு நெய்க்கியாழந்
துறையான துறையெல்லா மிதற்குட்சொன்னேன்
சுளுவாகத் தைலங்கள் சூரணங்கள்
பறையென்ற பறைபோட்டேன் வியாதிக்கெல்லாம்
பண்பதுபோற் றுலக்கிவிட்டேன் பலநூலுள்ளே
நிறையான துறையெல்லாஞ் சுருக்கிச்சொன்னேன்
னிச்சயமாய் நூற்றுக்கு ணிகர்காணேனே. (104)

## மேகத்துக்குத் தைலம்

நிகரில்லா மேகத்தின் தைலங்கேளு
நிசமான சந்தனமு மிலாமிச்சோடு
வகையாக வாவிரையின் பட்டைதானும்
வளமாகப் பலம்பத்து நிறுத்துத்தூக்கிப்
புகையாமற் றூணிநீ ரெட்டொன்றாக்கிப்
புகழுற்றக் கியாழத்தை யிறுத்திக்கொண்டு
நகையாம வெள்ளெண்ணெய் நாழிவிட்டு
நரிகிண்டி வேர்பலந்தா னரைத்துப்போடே. (105)

போட்டதனைக் காய்ச்சியே மெழுகதனாற்
புண்ணியனே வடித்திட்டுப் புகலக்கேளு
நாட்டினிலே முழுகிவர மேகந்தீரும்
நளினமாந் திரேகமுமே யிறுகிப்போகும்
பூட்டென்ற மேகநீர் போகவேண்டிப்
புனிதமா மருந்தொன்று சொல்வேன்மைந்தா
சாட்டதனை முன்சொன்ன பற்பந்தன்னிற்
சார்வாகக் கொடுத்துவிடு சாந்தமாமே. (106)

## வில்வவேர்த் தைலம்

சாந்தமாம் வில்வையுட தைலங்கேளு
தானான வில்வவேர் பலந்தான்பத்து
பாந்தமா யிடித்ததனைப் பதக்குநீரிற்
பருவமாய்க் காய்ச்சியே யெட்டொன்றாக்கிப்

Koviloor Digital Library



போந்தெண்ணெய் நாழியிலே பலந்தான்சந்தம்
புகழாகக் கியாழத்தி லரைத்துப்போட்டுச்
சேர்ந்ததோர் தைலமது மெழுகதானாற்
சிறப்பாக மூழ்கிவர வளமைகேளே. (107)

வளமையுடன் மூழ்கிவரப் பித்தம்போகும்
வரிசைபெற்ற மெய்யிலுள்ள வூஷ்ணமேகு
மிளமைபெற வாக்கிவைக்கு மேகம்போகு
மிருகண்ணுந் தெளிவுதரு மிருமல்தீரும்
உளமதனிற் பித்தமெல்லா மோடிப்போகு
முள்வரட்சி யுட்சுரங்க ளொழிந்துபோகுந்
தளமாகச் சூட்சமாந் தைலஞ்சொன்னேன்
தளராமற் பாருநீ தரணியோர்க்கே. (108)

## வேங்கைத்தைலம்

தரணியுள்ள மானிடர்கள் பிழைக்கவேண்டிச்
சாற்றுகிறேன் வேங்கையது தைலந்தன்னைக்
கரணியமாய்ப் பலம்பத்துத் தூக்கிக்கொண்டு
காய்ச்சியிடு தூணிநீ ரெட்டொன்றாகத்
திரணியுள்ள கியாழத்தை வடித்துவாங்கித்
திறமான விலாமிச்சுப் பலமொன்றாக
வரணியமாய்க் குடிநீரி லரைத்துப்போட்டே
வளமாக மெழுகுபத மானவாரே. (109)

வாறாக முழுகிவர வகையைக்கேளு
வாதமொடு சூலைகளு மாண்டுபோகும்
பேறாகப் பித்தமெல்லாம் நடுங்கியோடும்
பீனிசமு மண்டையிடி பிரட்டற்சத்தி
வீறான விக்கல்முத லுடனேபோகும்
மெய்யெல்லாங் காந்தியுண்டாம் விழிரோகம்போம்
நூறாகுப் பின்சொன்னத் தைலப்போரு
நுணுக்கமாம் பற்பத்தின் போக்குநூறே. (110)

## வெட்டிவேர்த்தைலம்

போக்கான சோதியொன்று சொல்லக்கேளு
புகழான வெட்டிவேர் பலந்தான்பத்து
நோக்காக விடித்ததனைப் பதக்குநீரி
னுணுக்கமாய்க் காய்ச்சியே யெட்டொன்றாக்கி

Koviloor Digital Library



வாக்காக வடித்ததனி லெண்ணெய்நாழி
வளமையா யதிமதுரம் பலந்தானொன்று
தாக்கான வெண்ணெய்க்கு ளரைத்துப்போட்டுச்
சாதகமாய் மெழுகுபதந் தன்னில்வாங்கே. (111)

வாங்கியே முழுகிவர வரிசைகேளு
மானிலத்தின் மனிதர்கட்கு மண்டைச்சூலை
யோங்கியே குஷ்டமொடு பிறநீர்க்கோவை
யொளிமருளுங் கண்புகைச்சற் காதுமந்த
மேங்கியே யுளைப்பிளைப்பு மேற்கால்நோயு
மியல்கெட்ட தாதுசய மெரித்தற்காந்தல்
நீங்கியே போவதற்கோர் மண்டலந்தா
நேராக வொன்றைவிட்டே யொருநாளென்னே. (112)

## வேம்பின்பட்டைத்தைலம்

என்னவென்ற இன்னமொரு தைலங்கேளா
யினிதான வேம்பினிட பட்டைவாங்கி
யுன்னவென்று கால்துலா மிடித்துக்கொண்டே
யொருதூணி நீரதுதான் வார்த்துக்காய்ச்சி
சொன்னதென்ன வெட்டொன்று யிறுத்துமெள்ளச்
சுருதிபெற வெண்ணெயிரு நாழிவிட்டு
நன்னயமா மேலமதில் பலமிரண்டு
நலமான கியாழத்தி லரைத்துப்போடே. (113)

அரைத்துடனே காய்ச்சிவிடு மெழுகதானா
லாற்றியே வடித்ததனை முழுகும்போது
நிரைத்திட்ட வாதமெல்லா மேங்கியோடு
நீசமான சூலையொடு குஷ்டரோகந்
திரைத்திட்ட நீரிழிவு மேல்கடுப்புச்
செங்கரப்பான் புண்புரைகள் தெறிப்போகு
முரைத்திட்ட தைலத்தி லுறுதிமெத்த
வுத்தமனே வேறொன்றை யுரைக்கிறேனே. (114)

## குறுந்தொட்டித்தைலம்

உரைக்கிறேன் குறுந்தொட்டி வேரைமைந்தா
வோர்நிறையாங் கயல்துலா மிடித்துப்போட்டு
நிரைக்கிறேன் தூணிநீ ரெட்டொன்றாக்கி
நேராக வெண்ணெயிரு நாழிவிட்டு

Koviloor Digital Library



கரைக்கிறேன் கியாழத்தா லரைத்துமைபோற்
கசகசா விருபலந்தான் கண்டுகொள்ளு
நரைக்கிறே னெண்பதென்ற வாதமெல்லா
நடுநடுங்கி யோடுமடா நயந்துகாணே. (115)

## கொடுவேலிவேர்த்தைலம்

நயமான கொடுவேலி பலந்தான்பத்து
நன்றாக விடித்திட்டுப் பதக்குநீரில்
வயமாக வற்றக்காய்ந் தெட்டொன்றாக்கி
வளமான நல்லெண்ணெய் நாழிவிட்டு
நியமாக புன்னைக்காய் வெண்ணெய்போட்டு
நிலையான சீரகமும் பலந்தானொன்று
ஜெயம்பெறவே யரைத்ததனைப் பாகிற்சேர்த்துச்
சீரான மெழுகுபத மானவாறே. (116)

ஆனதயி லம்வடித்து முழுகும்போதே
யானந்த வாயுவினோ டனந்தம்வுஙய்வுந்
தேனமருங் குழலாய்கேள் வாதத்தோடு
சிடிசொரியுந் இனவுமுதற் சிரங்குகுட்டம்
போனதென்ன வரையாப்புக் கரந்திசூலை
புண்புரைக ளோடுபொடி பிளவைவீக்கம்
நானெனவே வந்தநோய் பலவுந்தீரும்
நல்லதொரு தைலமிது நாடிப்பாரே. (117)

## சீரகத்தைலம்

பாரப்பா சீரகந்தான் படியோரண்டு
பதமாக விடித்துநீர் பதக்குவார்த்துச்
சீரப்பா வெட்டொன்றாய்க் கியாழம்வாங்கித்
தெளிவாக வெள்ளெண்ணெய் படிதான்வாரு
காருறையுங் கார்ப்போகி பலமிரண்டு
கியாழத்தா லரைத்ததனைக் கலக்கிச்சேர்த்தே
ஏறவே மெழுகுபத மாயிறக்கி
யியல்பாக முழுகிவரக் குணத்தைக்கேளே. (118)

குணமென்ன குன்மமெட்டு வாய்வுபத்துங்
குட்டமொடு தமுதனையுங் குண்டலம்பின்
மணமென்ன வாந்திபித்தங் கிறுகிறுப்பு
வாயுவினால் வந்ததொரு சோகைபாண்டுங்

Koviloor Digital Library



கணமென்ன வூஷ்ணரோ கங்களும்போம்
கபாலத்திற் சூடுகப நீர்க்கட்டும்போம்
பணமென்ன நோய்தீரா மருந்துமுண்டோ
பார்தனிலே முளைத்தமூ லிகைக்குட்பாரே. (119)

மூலிகைக்குள் வெகுமூலி சஞ்சீவியப்பா
முளைத்துதே மலைதோறுங் குவடுதோறுஞ்
சாலவே வெகுபூடு நாட்டிற்குள்ளே
சாதகத்தை யறியார்கள் சண்டிமாந்த
ராலிக்கும் வைத்தியன்றான் குணத்தைக்காணா
ணாண்மையினால் வயிற்பிழைக்க வலைவான்மட்டை
சோலிக்குண் மனதுவைக்க வேண்டாஞ்சொன்னேன்
றுரையான திருநூற்றின் றுரையைப்பாரே. (120)

## சூரிவித்துத்தைலம்

நூற்றிலே யின்னமொரு தைலங்கேளு
நுணுக்கமுள்ள சூரிவித்துத் துலாந்தான்காலே
ஏற்றியே யிடித்துநீர் பதக்கிற்கொட்டி
யொட்டொன்றா யொருவிரகால் வற்றக்காய்ச்சிப்
போற்றியே வடித்ததனி லெண்ணெய்நாழி
போதவிட்டுக் கற்கவகை சாற்றக்கேண்மின்
றோற்றியே யறுமாதக் காடிநாழி
சுக்கதிலே யொருபலந்தா னரைத்துச்சூட்டே (121)

சூட்டியபின் பதமெழுகா யிறக்கிக்கொண்டு
தோன்றவே முழுகிவர மண்டலந்தா
னோட்டிவிடுங் கிரந்திகுட்டஞ் சூலைகுன்ம
மூண்டுவிடுங் கிராணியெல்லா முள்மூலத்தை
வாட்டிவிடுஞ் சூடுமுதல் வாங்கிப்போகும்
மைந்தனே மலக்கட்டு மயங்கியேகுந்
தாட்டிகமாய்த் தீர்த்துவிடுந் தைலப்போக்குச்
சஞ்சீவி யொப்பென்ன சாற்றினேனே. (122)

## கீழ்க்காய் நெல்லித்தைலம்

சாற்றவகை யின்னங்கேள் கீழ்க்காய்நெல்லி
சமூலமாய் காற்றுலா மிடித்துக்கொண்டே
யாற்றுநீ ரதுவிட்டுக் கியாழஞ்செய்தே
யப்பனே யெட்டொன்றாய்க் காய்ச்சிவாங்கி

Koviloor Digital Library



மாற்றிடுவா யெள்ளெண்ணெய் படிதான்ரண்டு
வளமான சருக்கரையும் பலந்தானோரைந்
தேற்றியே கர்க்கமிட்டு மெழுகதாணா
லியல்பாக முழுகிவரத் தீருநோய்கேள். (123)

கேளடா பித்தமென்ற தெல்லாந்தீரும்
கிறுகிறுப்புத் தலைச்சுழற்றல் வாய்நீரூற
னாளடா ரத்தபித்தம் வெறித்தபித்த
நலமான விளைப்பிறைப்புப் பித்தரோகஞ்
சூளடா மஞ்சள்நீ ரிரத்தமூத்ரஞ்
சூடுமுத லூரட்ணங்கள் பலவும்போகும்
வேளடா மேலெரிவு கைகாற்காந்தல்
வெளுத்தமயிர் கறுப்பாகும் விதத்தைப்பாரே.

## சங்கம்வேர்த்தைலம்

விதமாக சங்கினுட தைலமூலம்
வெட்டிவந்து காற்றுலா மிடித்துப்போட்டுப்
பதமாகத் தூணிசல மெட்டொன்றாக்கிப்
பாரதிலே யெள்ளெண்ணெய் படிரண்டிட்டே
அதமாகு மிளகுபல மரைத்துச்சேர்த்தே
யப்பனே மெழுகுபத மானவாறு
கதமாயே வடித்ததனை மூழுகும்போது
சொல்வதென்ன குட்டமொடு சொரிசிரங்கே. (125)

சிரங்குடனே கிரந்திபத்துஞ் சூலைரோகஞ்
செங்கரப்பான் வண்டுகடி சிலவிஷங்கள்
குரங்குபோ லிருக்கின்ற வலிசயங்கள்
குற்திருமல் வாதஜலங் குடிபோமென்று
வரங்கொடுக்குஞ் சிவனுரைத்த வார்த்தைகேட்டு
மாயிசொல்ல யானறிந்து வாழ்த்தினேன்கா
ணறங்கதுவா யின்னமொரு தைலங்கேளா
யமுக்குரா பலம்பத்து வாகாய்வாங்கே. (126)

## அமுக்குராத்தைலம்

வாங்கியே யிடித்ததனைப் பதக்குநீராய்
வடித்துக்கொண் டெண்ணெய்படி யதனிற்சேர்த்தே
ஓங்கியே யெலுமிச்சஞ் சாறுநாழி
யொக்கவிட்டு மெழுகுபத மாகப்பார்த்துத்

Koviloor Digital Library



தேங்கியே வடித்தெடுத்து வைத்துக்கொண்டு
திறமாக முழுகிவரச் சுருக்கைச்சொல்வேன்
பாங்கியே பீனிசங்க ளெல்லாம்போகும் -
பாரிலுள்ள மண்டையிடி பறந்துபோமே. (127)

## இஞ்சித்தைலம்

பறப்பதற்குப் பின்னுமொரு தைலங்கேளு
பச்சையிஞ்சி காற்றுலாம் பரிந்திடித்துச்
சிறப்புடனே பிழிந்துவடி கட்டிக்கொண்டு
தெளிவுறவே யெண்ணெயதிற் படிதான்விட்டே
யுறப்புடனே பசுவின்பால் படியேயாகு
முறுதியா மெழுகுபத மாகவாங்கிச்
சிறப்புடனே முழுகிவரப் பருவமாகத்
திடம்பெறவே தீருநோய் நிகழ்த்துறேனே. (128)

நிகழ்த்துகிறேன் மண்டையிடி சூலைவாத
நிலைகெட்ட பீனிசங்க ளிகையிளைப்புப்
புகழ்த்துகிறேன் சூலையொடு வாதவாய்வு
பொல்லாத கால்கடுப்பு நெஞ்செரிப்பு
மகத்திலே மெய்ந்நோவ தெல்லாநீங்கு
மாளுமடா குட்டங்க ளனந்தங்கேளு
ஜெகத்திலே நாடாம லோடிப்போகுஞ்
செம்முள்ளி யெண்ணெய்தனைச் செப்புவேனே. (129)

## செம்முள்ளித்தைலம்

செப்புவேன் செம்முள்ளி பலநூறப்பா
சிறக்கவே சமூலமா யிடித்துப்போட்டே
யொப்புவென் றூணிநீ ரதிலேயூற்றி
யுறுதியா யெட்டொன்றா யிறக்கிக்கொண்டே
யப்புவே னதைவடித்து நாழியெண்ணெ
யகம்விட்டுக் காய்ச்சிபத மானபோது
நப்புவேன் முழுகிவருங் காலந்தன்னில்
நன்றாகத் தீருநோய் நவிலக்கேளே. (130)

நவிலக்கேள் சயமீளை சயரோகங்கள்
நாடாது மந்தார காசந்தானுங்
கவிலக்கேள் வாதமெல்லாங் காணாதோடுங்
கண்ணீர்ப் பாய்ச்சலொடு குறைநோயெல்லா

Koviloor Digital Library



மவிலக்கேள் புண்புரைக ளனைத்துந்திரு
மரையாப்புக் கிரந்திமுத லண்டவாத
முவிலக்கேள் வீக்கமொடு விடப்பாகந்தா
னோடுமடா வித்தைல முழுகும்போதே. (131)

## சாரணைத்தைலம்

முழுகவே யின்னமொரு தைலங்கேளு
முக்கியமாய்ச் சாரணைவேர் பலந்தான்பத்துத்
தழுகவே யிடித்ததனைப் பதக்குநீரிற்
றாக்கியே யெட்டொன்றாய்க் காய்ச்சியெண்ணெ
யொழுகவே யொருநாழி யொக்கச்சேர்த்தே
யுத்தமனே மெழுகுபத மாயிறக்கிச்
செழியவே முழுகிவரும் போதுமைந்தா
சிதறிப்போம் வாதத்தால் வந்தகூறே. (132)

## இருவேலித்தைலம்

கூறாக விருவேலி பலநூறப்பா
கொத்தாக நிறுத்திடித்துத் தூணிநீரிற்
பேறாக விட்டவித்தே யெட்டொன்றாக்கிப்
பேணியே யெண்ணெயதி னாழிவார்த்து
வீறாகக் கொதித்துவற்றி மெழுகதனால்
மெய்யெங்கும் பூசிமெள்ள முழுகும்போது
தேறாத வுஷ்ணங்கள் கிறுகிறுப்புச்
சேட்மபித்தங் கண்புகைமண் டலத்திலாமே. (133)

## அகிற்கட்டைத்தைலம்

ஆமின்ன மகிற்கட்டை பலமோகேளா
யைம்பதுதான் றூக்கியதைத் தூளாய்ப்பண்ணித்
தாமேநீர் தூணியிலிட் டெட்டொன்றாக்கித்
தப்பாம லெண்ணெயதி னாழிசேர்த்துப்
போமின்ன மெழுகுபத மானவாறு
புகழாக வடித்துநீ முழுகினாக்கால்
வேமின்ன நீர்த்தோட முடனேயப்பா
மேகங்க ளருமென்று விளம்பினோமே. (134)

Koviloor Digital Library



## அறுகம்வேர்த்தைலம்

விளம்புவே னறுகம்வேர் பலந்தாநூறு
வேரிலுள்ள பச்சையெல்லாந் தள்ளிப்போட்டுத்
தளம்பவே நன்றாகவ வித்துக்கொண்டு
தண்ணீர்தா னூறுபடி யதிலேவார்த்துக்
குளம்பாகக் காய்ச்சிடுவா யெட்டொன்றாயே
குறிகண்டு வடித்தெண்ணெய் நாழிசேர்த்து
வளம்பெறவே மெழுகுபத மானவாறு
வாங்கியே பருவமாய் முழுகுவாயே. (135)

முழுகியே வரும்போது குணத்தைக்கேளு
மூலத்துச் சூடுடனே கபாலச்சூடுந்
தழுவியே பித்தமெல்லாந் தலைகெட்டோடும்
தன்னுக்குள் வாதமெல்லாந் தவறுண்டேபோ
மழுகியே வருங்கிரந்தி சூலைநீர்க
ளானதொரு வயிறெரிவு நெஞ்சினோவு
கொழுவியதோர் நீர்க்கடுப்பு மேல்வரட்சி
கோபித்த வக்கினியுங் குளிர்ந்துபோமே. (136)

## கொடுப்பைத்தைலம்

குளிரவின்னம் வகையொன்று சொல்லக்கேளு
கொடுப்பையிநீர் படியெண்ணெய் சரியேயாகும்
தளிரான கோஷ்டமதில் பலந்தானொன்று
தன்மையுள்ள பசுவின்பால் விட்டேயாட்டி
யெளிதாகக் கரைத்துவிட்டு மெழுகதானா
லிறக்கிமெள்ள வடித்துக்கொண் டெழிலாய்நாளு
நளினமாய் முழுகிவர மண்டலத்தி
னலமாகத் தீருநோய் நவிலக்கேளே. (137)

கேளப்பா பித்தமெல்லாங் கெடிகெட்டோடுங்
கிறுகிறுப்பு மண்டையிடி ஜன்னிதாகம்
பாளப்பா வுஷ்ணங்க ளுட்சுரங்கள்
படுபாவி மேலெரிவு கைகாற்காந்தல்
தேளப்பா கண்ணெரிவு சிரசுசூடு
திரேகவலி யெரிகுன்மந் தீர்ந்துபின்னும்
வாளப்பா கண்ணுக்குத் தெளிவுண்டாகு
மகத்தான தைலமிது மருவிச்செய்யே. (138)

Koviloor Digital Library



## கையாந்தகரைத்தைலம்

செய்யவே யின்னமொரு சேதிகேளு
செகத்திலுள்ள கையாஞ்சாற் படிதானொன்று
வெப்பவே குமரிச்சாற் படிதானொன்று
விளம்பவே னெல்லிக்காய் சாறதொன்றே
யுய்யவே மூன்றுமது வொக்கச்சேர்த்தே
யுறுதிபெற வெள்ளெண்ணெய் படிதானாகு
மெய்யாகச் சாதிக்காய் பலமவ்வீதம்
விருதாக வேயரைத்துக் கலந்துபோடே. (139)

போட்டிவற்றை மெழுகுபத மாகப்பார்த்து
புகழ்பெறவே வடிக்கொண்டு முழுகும்போது
தாட்டிகமாய்க் கண்ணோவு தலைநோவோடு
சளமான செவிநோவுஞ் சார்பித்தத்தை
யோட்டிவிடு மூஷ்ணங்கள் பீனிசங்க
ளோடிப்போ மென்றுமுனி யுரைத்தவாறு
நாட்டிலுள்ளோர்க் கின்னமொரு தைலங்கேளு
நலமான சவரிபல நூறுவாங்கே. (140)

## சவரித்தைலம்

பலநூறு தானிடித்துத் தூணிநீரிற்
பைங்கிளியே யெட்டொன்றாய் வற்றக்காய்ச்சி
சலம்தனை யிறக்கிக்கொண் டெண்ணெய்நாழி
தயங்காம லிட்டொன்றாய்க் கூட்டிச்சேர்த்து
நலமாகக் கருஞ்சீரம் பலந்தானொன்று
நாடியரைத் ததிற்போட்டுக் கரைத்திட்டேதான்
பிலமான மெழுபத மாகும்போது
பிசகாமல் வடித்தெடுத்து முழுகுவாயே. (141)

வாய்ப்பான வாதமொடு குட்டமெங்கே
வாதத்தா லெழுந்ததொரு கரப்பானெங்கே
காய்ப்பான காய்ப்போது கழலையேது
கண்டத்தில் வீக்கமுதல் வாடிப்போகும்
நோய்ப்பான நோயெல்லா மகன்றுபோக
நுணுக்கமாய்த் தைலமொன்று நுவலக்கேளு
சாய்ப்பான செந்நாவற் பட்டைத்தூளு
சாங்கமாய்ப் பலநூறு தாக்கிடாயே. (142)

Koviloor Digital Library



## செந்நாவற்பட்டைத்தைலம்

தாக்கியே யிடித்ததனைத் தூணிநீரிற்
றயங்கமாற் போட்டுபத மெட்டொன்றாக்கி
நோக்கியே பால்நாழி யுடனேமைந்தா
நுணுக்கமாய் வேப்பெண்ணெய் படிதானொன்றே
யாக்கியே வசம்பதுவும் பலமேதூக்கி
யரைத்துதீ கரைத்துவிட்டு மெழுகதானாற்
றூக்கியே வடித்துமெள்ள முழுகினாக்காற்
றுடியான வாதமொடு பித்தம்போமே. (143)

## அகிற்பட்டைத்தைலம்

போகவே யின்னமொரு தைலங்கேளு
புகழான வகிற்பட்டைப் பலந்தானூறு
சாகவே யிடித்ததனைத் தூணிநீரிற்
சாதகமாய்ப் போட்டவித்தே யெட்டொன்றாக்கி
வேகமா யெண்ணெயதி னாழிவிட்டு
வேப்பெண்ணெய்ப் படுபாதி கூடச்சேரு
நாகவல்லிக் கொடிச்சாறு மொக்கவார்த்து
நலமாக மெழுகுபத மானபோதே. (144)

## துராப்பாசித்தைலம்

பதமாக முழுகிவரத் தீருநோய்கள்
படுபாவி வாதமெல்லாம் பரந்துபோகு
மிதம்படவே யின்னமொரு தைலஞ்சொல்வே
னிடித்திடுவாய்த் துராப்பாசி பலந்தான்ரண்டு
சிதமான தூணிநீர்த் தன்னிற்போட்டுச்
சிறக்கவே யெட்டொன்றாய் வடித்துக்கொண்டு
சுதமாயே யேரண்டத் தெண்ணெய்நாழி
தூளாக்கி மஞ்சள்பலம் போட்டுக்கிண்டே. (145)

கிண்டியே வடித்திடுவாய் மெழுகதாக
கெடிகலங்கி யோடிவிடும் வாதமெல்லாம்
பண்டிதருக் கிம்முறைகள் பாடமுண்டோ
பார்ப்பதற்கு வெகுசூளுவு பரிந்துபாரு

Koviloor Digital Library



கண்டிதமாய்ச் சொல்லிவிட்டே னுணுக்கமெத்தக்
கதிகெட்ட நோய்களது தீரவென்றே
யுண்டுகொண் டிருப்பதற்குச் சொர்ணமுண்டோ
வுறுதியிந்த நூன்முறையை யூணிப்பாரே. (146)

## பொன்னாங்காணிக்கிரதம்

ஊணியே யின்னமொரு சேதிகேளா
யுள்ளுக்குத் தைலமொடு கிரதஞ்சொல்வேன்
காணவே காணிவேர் பலந்தானொன்று
கனமான வெட்டிவேர் விலாமிச்சம்வேர்
பூணியே யோரிதழ்வேர் சிறுகீரைதான்
புகழ்வேரும் வகைக்குமொரு பலமதாகப்
பாணியே பாலதுவார்த் தரைத்துநெய்தான்
படிரண்டுக் குள்ளிட்டுக் காய்ச்சுக்காய்ச்சே. (147)

காய்ச்சியே யுட்கொள்ளக் கரண்டிவீதங்
தனரோகம் பதினெட்டுங் காணாதோடு
மாச்சுதே யுட்சுரங்க ளகன்றுபோகு
மணுகாதி யூட்ணங்கண் மேகமின்னும்
போச்சுதே வரட்சியுட னுள்ளுள்ரோகம்
புண்ணான வக்கரங்கள் போகுஞ்சொன்னே
னேச்சதே யெண்ணாதே யிடுசாதிக்கா
யினிதான வதிமதுர மாச்சக்காயே. (148)

## சதாவேரிக்கிரதம்

காயென்று வகைக்குயொரு கழஞ்சிவீதங்
கரைத்திடுவாய்ப் பாலில்முன்போல் நெய்க்குள்ளேதான்
றாயென்றே யின்னமொரு கிரதஞ்சொல்வேன்
சதாவேரிக் கிழங்கினுட சாறுநாழி
வாயென்ற திரிகடுகு திரிபலாதி
வகைவீதங் கழஞ்சியொன்று நறுநெய்நாறு
ஏயென்றே யெரியிட்டு மெழுகதானா
லிறக்கியே வடித்திடுவா யியல்பைக்கேளே. (149)

இயல்பாகக் கரண்டிநிரை யுண்ணுங்காலை
யெழுந்ததொரு கரப்பான்க ளெல்லாம்போகு
முயலான நீர்விஷங்க ளனைத்துந்தீரு
முறக்கியெழும் வாய்வுடனே யிரைச்சலேகுஞ்

Koviloor Digital Library



*சியலான பித்தமொடு சிலேர்ப்பனங்கள்*
*ஜெனித்ததொரு கிறுகிறுப்புச் செரியாமாந்த*
*மியலான கிருமிகளு மற்றுப்போகு*
*மேன்மையா யின்னமொரு கிரதங்கேளே.* *(150)*

## திரிகடுகுகிரதம்

*கிரதமாந் திரிகடுகு திரிபலாதி*
*கேளப்பா வகைவகைக்குப் பலந்தானொன்று*
*நிருதமாய்ச் சலம்பத்துப் படியிற்குள்ளே*
*நேராகப் போட்டுபத மெட்டொன்றாக்கி*
*விருதாவாய்ப் போகாமல் மெழுகதானால்*
*மேன்மையாய் வடித்ததனை வைத்துக்கொண்டு*
*சிறுகவே கரண்டிநிரை கொள்வாயானால்*
*தீருகிற வியாதியதைச் செப்பக்கேளே.* *(151)*

*செப்புவேன் சீரகமு மோமங்கூட்டிச்*
*சிதறாமற் சூரணித்துப் பதனம்பண்ணி*
*இப்புவியில் வெருகடிநெய்த் தேனிற்கொள்ள*
*வீரெட்டுக் கரப்பானுஞ் சிரங்குகுஷ்ட*
*நப்புவேன் கிருமியுட னஜீரணங்க*
*ணாடாது கிரந்திமுதல் கிராணிமூல*
*மெப்போதும் வாராது சொன்னேன்மைந்தா*
*வின்னமொரு கிரதவகை யியம்பக்கேளே.* *(152)*

## தூதுவளைக்கிரதம்

*இயம்பக்கேள் தூதுவளை பலமோபத்து*
*வியல்கண்டங் கத்திரியு மதுதான்வீதந்*
*தயவான துளசியுமவ் விடையேசேரு*
*சாற்றியதோர் தோடையது மொப்பதாகும்*
*நயம்பெறவே பலம்பத்து விஷ்ணுகாந்தி*
*நன்றான பிரமியதும் பலம்பத்தாகுஞ்*
*செயம்படவே யிடித்திவற்றைத் தூணிநீரிற்*
*றிடமுடனே யெட்டொன்றா யெரித்திறுத்தே.* *(153)*

*இறுத்திட்டே யெண்ணெயுட நெய்யுங்கூட்டி*
*யிதமுடனே திப்பிலியுஞ் சித்தரத்தை*
*யுறுத்திட்டே வகைக்கியரை பலமாய்த்தூக்கி*
*யொளிமெழுகு போலரைத்துச் சேர்த்துக்கிண்டி*

முறித்திட்டுப் போகாமல் வடித்துக்கொண்டு
முக்கியமாய்க் கரண்டிநிரை யளவேயாக
ஒருதிட்டங் கொண்டாக்கால் தீருநோய்கே
ளூற்றதோ ரிருமலெல்லா மோடிப்போமே. (154)

ஓடிப்போந் தேன்கூட்டிக் கொண்டாயானர்
லுட்சுரங்க ளிரைப்பிளைப்புத் துரப்புக்கக்கல்
நாடாது வாய்வோடு கபக்கட்டெல்லாம்
நடுங்கியே பறக்குமடா நளினமாகுந்
தேடிப்போந் திரிகடுநெற் பொரிதன்னோடே
தேனிலே தின்றுவிடு கிரதஞ்சேர்த்து
வாடிப்போ மோகோகோ வகுத்தநோய்கள்
வண்மையா மென்றருளிச் செய்தவாறே.

## சன்னிக்குத்தைலம்

செய்தபடி சன்னிக்குத் தைலமொன்று
செப்பக்கேள் வெள்ளுள்ளி வசம்பினோடே
யுய்ததொரு நிலவேரு முசுறுமுட்டை
யுறப்பான தண்டுடனே கோழிமுட்டை
நெய்தமுள்ள நெய்நாழி வேம்பினெண்ணெய்
நிரையாகுஞ் சரக்குகளைப் பலமாய்த்தூக்கிச்
செய்தபொ ராமணக் கெண்ணெய்நாழி
சிறப்பாக விட்டதிலே பொரித்துக்கொண்டே. (156)

கொண்டுவிட வெண்ணெய்க்கு வகையைக்கேளு
கோலமுள்ள சுக்கிடித்துக் கிளிபோற்கட்டிச்
சுண்டவைத்துத் தைலத்திற் பதமாய்மைந்தா
சுகமாகக் குத்திவிட சன்னிவாத
மிண்டுசெய்யும் வலியைந்துஞ் சிதறிப்போகு
மீளாத சன்னிதனக் குள்ளுக்கேற்றுப்
பண்டுள்ள நோயதுதான் தீருமென்று
பண்பாக வித்தைல மியம்பினோமே. (157)

## நவச்சாரக்குழம்பு

இயம்புகிறே னவச்சாரக் குழம்புகேண்மி
னெருக்கம்பா லுழக்குடனே கள்ளிப்பாலாற்
சுயமான சாரமது கழஞ்சுபத்தைச்
சுகமாகத் தானரைத்து மெழுகதாக்கி

Koviloor Digital Library



நயம்பெறவே யாமணக்கி னெண்ணெய்சேர்த்து
நாணயமாய்ச் செப்புதனி லடைத்துக்கொண்டு
சயமான பெருவயிறு மகோதரங்கள்
தன்னோடு நீராம்பல் விஷப்பாகந்தான். (158)

பாகமாய் மிளகுடனே குன்றிவித்து
பகருகின்ற சுண்டக்காய் வீதங்கொள்ளு
வேகமாய்க் கிருமிகளு மலபேதங்கள்
விட்டுவிட வேணுமென்றால் வெந்நீர்கொள்ளு
நாகந்தன் விஷம்போன்ற நீர்களெல்லா
நாடாது ரவிகண்ட பனியைப்போலே
ஏகுமே யிம்மருந்து கொண்டாயானா
லேழுநாள் பால்கொள்ள வியல்பதாமே. (159)

## மேனிச்சூரணம்

தானென்ற மேனிச்சூ ரணமேசெய்து
தாங்கரிய சீரகத்தூ ளொக்கச்சேர்த்து
நாமென்ற நாற்பதுநாள் கொள்வீரானால்
நாடாது வாய்வெல்லா மனந்தந்தீருஞ்
சாமென்ற தீபனங்கண் மிகவுண்டாகும்
க்ஷணத்திலே மந்தமெல்லாந் தவறுண்டோடும்
வேமென்ற சிலவிஷங்க ளெல்லாந்தீரும்
வேதாக் கினிக்குமரன் பொடியதாமே. (160)

## சீரகப்பொடி

பொடியான பொடியொன்று சொல்லக்கேளு
புகழ்பெரிய சீரகமோ பலந்தானொன்று
செடியான வோரிதழ்தன் சன்னமொன்று
சிவந்ததொரு சந்தனமும் பலந்தானொன்று
மடியவே யிடித்துத்தூள் வைத்துக்கொண்டு
வளமாக நறுநெய்யிற் கழஞ்சியுண்ணு
துடியான வூஷ்ணங்க ளுனில் ரோகஞ்
சருக்குடனே நீர்க்கடுப்புப் பிறமேகங்கள். (161)

கேமமுட னுட்காய்ச்ச லெரிவுகாந்தல்
மிகையாக வந்தகுன்ம மெல்லாந்தீரும்
போகுமின்ன மெலும்புருக்கித் தசையடைப்புப்
பொறுக்காத நீர்த்தாக மார்பினோயும்

Koviloor Digital Library



வேகமுறும் வாய்நாற்ற மேனாற்றங்கள்
விட்டோடிப் பறக்குமின்னம் விளம்பக்கேளு
கூகைநீர் கஞ்சாவுஞ் சாதிக்காயுங்
கோகோ வாய்விளங்கங் குராசானியோடே (162)

குராசானி யிவைபலமொவ் வொன்றேயாகுங்
குணமாக வேவறுத்துச் சூரணித்து
நிராசாணி யாகியதோர் தூளில்மைந்தா
நேராகக் கருவேம்பின் பொடியைச்சேர்த்தே
புராசாணி வாழைப்பூ வவித்துப்பிட்டா
யுறப்பிழிந்து சாற்றினிலே கொண்டாயானால்
முரசாணி யானதொரு கடுப்பிளைப்பு
மூலத்திற் சூடும்போ முழங்குவாயே. (163)

## கொடிவேலிச்சூரணம்

முழங்கவே வேறுவகை சொல்லக்கேளு
மூதண்ட கொடுவேலி சூரணித்து
விழுங்கவே படியொன்று சீனிப்பாவு
வீறாக மேனித்தூ ளளவேயாகுங்
கழங்காமற் கார்போகி யரிசியோடே
கருஞ்சீர நற்சீர மூன்றுமைந்தா
புழுங்கவே வகைவகைக்குப் பலமொன்றாகப்
புனிதமாய்ப் பொடித்திட்டுப் புகழ்ந்துவைத்தே. (164)

வைத்திட்ட சூரணத்தைத் தேனிற்கொள்ள
வருஞ்சூலை கிரந்திகுட்ட வாதவாய்வு
வெத்திட்ட வண்டுகடி புழுவெட்டோடே
விஷக்கடியு மெலிக்கடியும் விலகிப்போகு
மெய்த்திட்ட மாகியதோ ரபானவாய்வு
விரைந்திறங்கு மூலத்திற் சூடும்நீங்குங்
கைத்திட்டத் தொழிலதனைச் சொல்லிவிட்டேன்
கனமான மிளகுநீர்க் கியாழங்கொள்ளே. (165)

## கெர்ப்பமில்லாதவர்களுக்கு

கொள்ளவே மண்டலத்திற் பாண்டுதீருங்
குணமாக வின்னமொரு முறையைக்கேளு
பிள்ளையில்லாப் பேர்களுக்கு மருந்துசொல்வேன்
பேயனது தும்மட்டி வித்துவாள

Koviloor Digital Library



முள்ளபடி குழித்தைலஞ் சமனாய்வாங்கி
யுறுமஞ்சள் பொடியதுவோ காசேதூக்கு
வள்ளலே தைலமுமந் நிரையேசேர்த்து
மத்தித்துக் கொண்டுவிடக் கெர்ப்பவாய்வே. (166)

கெர்ப்பவாய் வோடவென்று வீணாய்மைந்தா
கிலேசிக்கத் தான்வேண்டா நோய்கடீருஞ்
செப்பமுடன் மருந்துண்கில் வெந்நீர்கொள்ளு
திரும்பியே பேதித்தாற் கஞ்சிகொள்ளு
நம்பவே கொடுத்தநாண் முதலாய்த்தொட்டு
நன்றாக வொருபொழுதாய்க் கொண்டுவாநீ
யர்ப்பமென்று நினையாதே யுறுதியாகு
மதைத்தவிர பின்னையுமோ ரடவுகேளே. (167)

## கொம்பரக்குக்கிரதம்

அடைவான கொம்பரக்குக் குந்தரிக்க
மானந்த சாதிக்காய் பின்குராசாணி
திடமாகச் சூரணித்தே நல்லெண்ணெய்க்குட்
திரட்டியே கொண்டுவிடு சிறுபுன்னைக்காய்
குடலோடு பற்றியதோர் கிராணிமூலங்
குத்துகின்ற குறுக்குவலி மூலச்சூடு
கடல்போல வந்ததொரு கடுப்பெல்லாம்போங்
காதடைப்பும் புண்ணினுக்குங் கண்டவாறே. (168)

## முசுறுமுட்டைத்தைலம்

கண்டதொரு சேதியுண்டு சொல்லக்கேளு
காதிலுள்ள வியாதியெல்லாங் கட்டாய்த்தீர
விண்டபடி பூநாக முசுறுமுட்டை
வேரிலுள்ள நண்டிறைச்சி வெள்ளையுள்ளிக்
கொண்டபடி கோழிமுட்டை வசம்புகுக்கல்
குணமாக வகைவகைக்குக் கழஞ்சிகூட்டிப்
பண்டருளும் வேப்பெண்ணெய் தன்னிற்சேர்த்துப்
பதமாக வெரித்ததனைக் காதிற்பாய்ச்சே. (169)

Koviloor Digital Library



## செவிநோய், தந்தநோய், முதலியதற்கு மருந்து

பாச்சியே யடைத்திடுவாய் பத்தாநாளிற்
 பளிச்சென்று செவிகேட்குஞ் சீழ்பாச்சற்போ
மாச்சுதே குத்துளைச்சற் பூச்சிசாகு
 மடைப்புவிடுங் காதிரைச்ச லகன்று நீங்கும்
வாச்சுதே யின்னமொரு வரிசைகேளு
 வாயிலுள்ள வியாதியெல்லா மகன்றுபோக
பாச்சியே பாக்கத்தில் முன்தைலம்பூசிப்
 பச்சையாய்த் தின்றொதுக்கப் பற்குத்தும்போம். (170)

குத்துவிடு முட்பிரண்டை வேர்க்கியாழங்
 கொப்பளிக்கப் பல்லரணை தந்தசூலை
யத்துப்போ மசைந்தாலு முறத்துநிற்கு
 மழுக்கெல்லாந் தீர்ந்தகலு மதன்பின்கேளு
செத்துப்போம் நாக்கில்வருஞ் சிங்கிரோகந்
 தீரவொரு மருந்துசொல்வேன் சிவவேம்பின்வேர்
முத்தாகும் பல்விளக்க பத்தாநாளில்
 முறையான நோய்களெல்லா முழுதும்போமே. (171)

## வெள்வேல்நீர்

முழுதுமே போகவோரு மருந்துசொல்வேன்
 மூதண்ட வெள்வேலுங் குமிளும்வன்னி
பழுதில்லாக் குண்டலமாம் பாலையோடே
 பருத்ததோ ரெருக்கிலையு மரசுகாரை
தொழுதோண்டிப் பட்டையிவை சமனாய்த்தூக்கிச்
 சுந்தரமே தூணிநீ ரதனிற்போட்டு
வழுவுபடா தெட்டொன்றாய்க் காய்ச்சிக்கொண்டு
 வளமான செம்பீரஞ் சாறுநாழி. (172)

நாழியா மெள்ளெண்ணெய் யளவாய்வார்த்து
 நலமான துருசுவெள்ளைக் குந்தரிக்கம்
வீழவே வகைவகைக்குக் கழஞ்சிவீத
 மிரளாமற் பொடித்திட்டு வடித்தத்தோடே
கோழியி னுதிரம்விட்டுக் கொப்பளிக்கக்
 குறட்டைகளில் கட்டுமுதல் குலைந்துபல்லின்
வாழியென்ற புண்கள்முதல் வீக்கமெல்லாம்
 வாங்கிப்போம் வளமையுடன் வரிசைபாரே. (173)

Koviloor Digital Library



## பாகலிலைத்தைலம்

பார்ப்பதற்கு இன்னமொரு சேதிகேளு
பாகலிலைச் சாறுடனே கொம்மட்டிச்சார்
வேப்பிலையின் றன்சாறு மெருக்கன்சாறும்
விழுதியுடவிலைச்சாறும் வகைக்குநாழி
சேர்ப்பதென்ன வேப்பெண்ணெ யாமணக்கெண்ணெய்
சேர்வகைக்கு நாழிவிட்டுப் பதமாய்வாங்கித்
தார்ப்புடனே காசிடைதான் கொள்ளும்போது
சலக்கட்டு மலக்கட்டுங் கிருமியோடே. (174)

கிருமியென்ற புழுக்கனெல்லா மற்றுப்போகுங்
கெர்ப்பத்தில் மலட்டுப்புழு கெதிகெட்டோடும்
வறுமையென்ற வாய்வனைத்தும் மண்ணேயாகும்
வாதமொடு மலக்கட்டுந் திரண்டவாய்வு
மொருமித்துக் காணாம லேங்கியோடு
முலகத்திற் சுருக்கிதுதா னுணர்ந்துதேறு
கருமமென்ற வகைகளெல்லாஞ் சொல்லிவிட்டேன்
கஷாயத்தின் பெருமையின்னுங் காட்டுவேனே. (175)

## மருதோன்றிக் கியாழம்

காட்டுவேன் மருதோன்றி வேர்தான் ஸமந்தா
கால்பலங்கேள் சீரகமு மொக்கச்சேர்த்தே
யோட்டுகிற யிருநாழி நீரிலிட்டே
யுழக்காகக் காய்ச்சியதை ரெண்டுவேளை
மூட்டுகிறேன் மூன்றுதினங் கொள்வீரானால்
முறைச்சுரமும் விஷச்சுரமு மூலவாய்வு
மீட்டுவிடும் பித்தமொடு மாந்தந்தீரும்
விளம்புவே னின்னமொரு விதமுந்தானே (176)

## வெட்பாலைக் கியாழம்

விதமென்ன வெட்பாலை சீரகந்தான்
வீறாக வகைவகைக்குப் பலங்கால்தூக்கி
யிதமுடனே யிருநாழி நீரில்விட்டே
யெட்டொன்றாய்க் காய்ச்சியதை யிறுத்துக்கொண்டு

Koviloor Digital Library



பதமாகக் குடித்துவரில் தீருநோய்கள்
பறக்குமடா வாய்வெல்லாம் பாருபாரு
மிதமில்லாக் குன்மவகை யனைத்துந்தீரு
மேன்மையா யின்னமொரு வரிசைகேளே. (177)

## வில்வவேர்க் கியாழம்

வரிசையுள்ள நெற்பொரியும் வில்வவேரும்
வகைக்குக்காற் பலமாயீர் நாழிநீரி
லுரிசையுட னெட்டொன்றாய் வடித்துக்கொண்டே
யுட்கொள்ள வந்தசக்தி விக்கல்போகும்
பிரியமுட னின்னமொரு கியாழஞ்சொல்வேன்
பேரான முன்னைவேர் வில்வவேருந்
துரிசான சுக்குடனே வகைக்குக்காலாய்ச்
சூட்டியே யிருநாழி நீரிலிட்டே. (178)

## முத்தக்காசுக் கியாழம்

இட்டவித்தே யெட்டொன்றாய்ச் சுண்டக்காய்ச்சி
யெடுத்துநீ கொண்டிடவே விக்கல்வாந்தி
முட்டவிடும் பித்தமுட னுழலைதாக
முறையான சுரந்தீரு மொழிந்தவாறு
சட்டமுட னின்னமொரு சேதிகேளு
தருவான முத்தமொடு விஷ்ணுகரந்தி
யிட்டமுடன் காற்பலமா யிடித்துத்தூக்கி
யிருநாழி நீரினில்விட் டெட்டொன்றாக்கே. (179)

## திரிபலாதிக் கியாழம்

ஆக்கியே மூன்றுநா ளிருபோதுண்ண
வகன்றசய மீளையிளைப் பதிகமூச்சு
போக்கிவிடு மதனோடு மிளகுகூட்டிப்
புண்ணியனே கியாழத்தைத் தேனிற்கொள்ளு
பாக்கியமா மின்னமொரு வகையைச்சொல்வேன்
பச்சைநெல்லித் தான்றியுடன் கடுக்காய்மூன்று
நோக்கியே வகைக்குக்காற் பலமேதூக்கி
நுண்மையாய் மிளகதிலே கழஞ்சுகூட்டே. (180)

Koviloor Digital Library



கூட்டியே யிருநாழி நீரிலிட்டுக்
குலாவியே யெட்டிலொன்றாய்த் தேனுஞ்சேர்த்து
நாட்டியே திரிகடுகு சூரணித்து
நலமாக விட்டருந்த சிலேர்ப்பனங்கள்
நீட்டியே கபமீளை யிளைப்புக்காய்ச்ச
னீங்குமே சயமனைத்து நில்லாதாகு
மோட்டியே விடுவதற்கா யின்னும்வேறே
யுரைக்கிறே னுலகத்தோர் பிழைக்கவென்றே. (181)

## சந்தனக் கியாழம்

என்றதொரு சந்தனமும் விலாமிச்சோடு
வெட்பாலை முத்தமுடன் சுக்குமைந்தா
நன்றெனவே வகைக்குக்காற் பலமதாக
நலமுடனே தூக்கியிரு நாழிநீரிற்
போன்றவே யெட்டொன்றாய் வடித்துக்கொண்டு
புகழ்சீனி யுடன்பத்து நாள்தான்கொள்ள
சென்றதொரு சுரம்வாய்வு சலதோஷங்கள்
சிரசிலுள்ள பித்தநீர் சேட்மவாதம். (182)

## வேம்புக்கியாழம்

வாதமொடு தாகங்க ணீர்க்கடுப்பு
மஞ்சளூறும் பித்தக்கா மாலைதீரும்
வேதமா யின்னமொரு கியாழஞ்சொல்வேன்
வேம்பினது பட்டையுடன் மிளகுஞ்சுக்கும்
நாதமுடன் வகைக்குக்காற் பலமேயாக
நளினமா யிருநாழி நீரிலிட்டுப்
போதமுட னெட்டொன்றாய் வடித்துக்கொள்ளு
புழுக்கிருமி மந்தமொடு வாய்வெல்லாம்போம். (183)

## இருவேலிக்கியாழம்

எல்லாந்தான் போகவொரு கியாழஞ்சொல்வே
னிருவேலி மதுரமுட னிஞ்சிமூன்றுஞ்
சொல்லாமல் வகைக்குக்காற் பலமாய்த்தூக்கிச்
சுகமாக விருநாழி நீரிலிட்டு

Koviloor Digital Library



வெல்லவே தீயிலெரித் தெட்டொன்றாக்கி
வீறாகப் பத்துநாட் கொள்வாயானால்
வல்லதொரு வாய்வுபித்தஞ் சோகைபாண்டு
வாங்கிவிடு மரோசிகமும் வாராதென்னே. (184)

## சிலேர்ப்பன முதலிய நோய்களுக்குப் புட்டவியல்

வாராம லின்னமொரு சேதிசொல்வேன்
மைந்தனே புட்டவியல் மார்க்கங்கேளு
தாரான பேய்ப்புடலும் பற்பாடம்பின்
றருந்துளசி தூதுளையுங் கண்டங்காலி
பாராமற் றோடையிலை சங்குசுக்கும்
பருவமுறு திப்பிலியு மிளகுமூலி
சீராக வகைவகைக்கோர் பிடியதாகச்
சேர்ந்தமருந் தொருகழஞ்சு நிறுத்துவாங்கே. (185)

வாங்கியே யிடித்ததனைப் புட்டேயாக்கி
வளம்பெறவே பிழிந்துகற் கண்டுதேனி
லோங்கியே கொண்டுவிடச் சிலேர்ப்பனங்க
ளுள்ளிரும லுட்சுரங்கள் வாதவாய்வு
நீங்கியே போமென்று சொன்னேன்சொன்னே
னிச்சயமா யின்னமொரு விலைநீர்சொல்வேன்
றாங்கியே முசுமுசுக்கை விஷ்ணுமூலி
தன்னுடனே நிலவேம்பு சங்கங்குப்பி. (186)

குப்பியது வகைவகைக்கோர் பிடியதாக
குறுகவே தானறிந்து சட்டிதன்னிற்
செப்பமுட னேயவித்துப் பிழிந்துகொண்டு
சேர்க்கின்ற மருந்ததனைச் செப்பக்கேண்மி
னொப்பமுடன் சீரகமுஞ் சுக்கிரண்டு
முடன்வறுத்துச் சூரணித்து மேலேதூவி
இரும்புவியிற் றேன்கூட்டி யுண்பீராகி
லுஷ்ணமுடன் வாதசுர மிடைந்துபோமே. (187)

## அவிநீர்

இடைந்திடவே யின்னமொரு சேதிசொல்வே
னியல்பான நிலவேரு மிஞ்சியுள்ளி
மடந்தையரே கொத்தானும் வேப்பமொக்கும்
வளமான நொச்சிலையும் வகையாய்க்கொண்டு

Koviloor Digital Library



கடந்ததொரு மருந்தெல்லாங் கழஞ்சுவீதங்
கருவாக வேயிடித்து வித்துவாங்கி
செடந்தனக்குத் தேன்கூட்டிக் கொள்வீராகிற்
செய்யசுரஞ் சன்னிமுதற் சிலேட்டமம்வாதம். (188)

வாதமொடு சன்னியெல்லா மாண்டுபோகும்
வஞ்சகங்க ளில்லாமல் மருந்துசொன்னேன்
போதமுடன் கண்டவனே நல்லோனாகும்
பொய்யென்று சொல்பவனே பொல்லாப்பாவி
வேதமுனி யிந்தநூல் வெளியாய்ச்சொன்னேன்
வித்தையிலே வெகுவித்தை யேகவித்தை
காதமல்ல தூரமல்ல விரும்பிச்செய்து
கனம்பெற்ற வீஸ்பரனா யிருக்கலாமே. (189)

## சிவனார்வேம்புத் தைலம்

இருக்கவே யின்னமொரு சேதிகேண்மி
னியல்பான சிவன்வேம்புத் தைலம்வாங்கிச்
சுருக்கமா மம்மூலி சூரணித்துச்
சுகமாகத் தைலத்திற் குழப்பிக்கொண்டால்
முருக்கம்பூப் போலாகு மேனியெல்லா
முனைமுகத்து வெட்டுண்ட புண்ணுமாறுஞ்
சுருக்கியதோர் கால்வெடிப்பு குட்டஞ்சூலை
தொலையாத கடிவிஷமுந் தோற்றுப்போமே. (190)

## வீழிவேர்த் தைலம்

தோற்கவே யின்னமொரு சேதிகேளு
சுருதியாம் வீழிவேர்த் தைலம்வாங்கி
யார்க்கவே யம்மூலி சூரணித்தே
யதிற்குழப்பிக் கொண்டிடவே மண்டலந்தா
னூக்கமுள்ள குட்டமெல்லா மொழிந்துபோகு
முடலில்வந்த வெளுப்பெல்லா மோடிப்போகுஞ்
சேர்க்கவின்னஞ் செப்புகிறேன் றிறமாய்க்கேண்மின்
சேங்கொட்டைத் தைலமதை யிறக்கிக்கொள்வீர். (191)

Koviloor Digital Library





## சேங்கொட்டைத்தைலம்

இறக்கியே பஞ்சாங்கஞ் சூரணித்தே
யிதிற்குழப்பித் தின்றிடவே யெல்லாநோயும்
பறக்குமடா நரைதிரையும் வாராதென்று
பகர்ந்திட்டே னின்னமொரு சேதிகேளு
சிறக்கவே வேம்பினிட தைலம்வாங்கிச்
சீரகத்தைப் பஞ்சாகச் சூரணித்து
நிறக்கவே யதிற்குழப்பித் தின்றாயானா
னீங்காத வாதமெல்லா நீங்கிப்போகும். (192)

## தேற்றான்தைலம்

நீங்கிப்போங் குட்டமொடு கிரந்திசூலை
நிலையான நரைதிரையு நிலைவிட்டோடு
மோங்கியே யின்னமொரு சேதிகேளு
முறுதியுள்ள தேற்றானைத் தைலம்வாங்கிப்
பாங்கியே பஞ்சாகச் சூரணித்துப்
பரிவான தைலத்திற் குழைத்துட்கொள்ள
வேங்கியே வியாதியெல்லாந் திடுக்கிட்டந்தோ
விருந்தவிடம் விட்டோடு மிருப்புத்தானே. (193)

## வாலுளுவைத்தைலம் - பிராயன்தைலம்

இருப்பான வாலுளுவைத் தைலம்வாங்கி
யியல்புடனே யுட்கொள்ள மண்டலந்தான்
கருப்பாயு நோய்களெல்லா மோடிப்போகுங்
கைகண்ட வித்தையடா தைலப்போக்குக்
கொருப்பான பிராயனது தைலம்வாங்கிக்
கொண்டிடவே யரையாப்புக் குஷ்டமோடு
பொருப்பான பற்பிளவு முதலாயுள்ள
பொல்லாத நோய்களெல்லாம் போகுந்தானே. (194)

## வெண்புரசுத்தைலம் - வெள்வேல்தைலம்

தானென்ற வெண்புரசு தைலம்வாங்கிச்
சாதகமாய்க் கொண்டிடவே மண்டலந்தா
னேனென்ற குஷ்டங்க ளெல்லாநீங்கு
மெளிதாக விம்மருந்தை யிசைந்துசெய்நீ

Koviloor Digital Library



பாமென்ற வெள்வேலின் றைலங்கொண்டாற்
பல்லுளைவு நின்றுவிடும் பழமையாகு
மூமென்ற வாய்வினிட தைலங்கொண்டா
லுறுதியாய் வியாதியெல்லா மொழிந்துபோமே. (195)

## கருஞ்சீரகத்தைலம்

ஒழியவே யின்னமொரு விவரங்கேளா
யுற்றகருஞ் சீரகமுங் கெந்தகந்தான்
றெளியவே பத்துக்கொன் றாகச்சேர்த்துத்
திறமாகக் குழித்தைல மிறக்கியுண்ண
வளியவே வந்தவினை சிரங்குகுட்டம்
வாதமொடு சூலையெல்லா மகன்றுபின்னுந்
துளிபாயுஞ் சீழ்சலங்கள் கரப்பான் போகுந்
தோலுரியுந் தழுதணையுஞ் சுத்தமாமே. (196)

## அமுக்குராவேர்த்தைலம்

சுத்தமா யின்னமொரு சேதிகேளு
சூட்சமா யமுக்குராத் தைலம்வாங்கிப்
பத்தியா யதன்வேரைச் சூரணித்துப்
பாய்ச்சியே கொண்டுவிட மண்டலந்தா
னித்தமாஞ் சூலையொடு கிரந்திகுஷ்ட
நீங்காத வியாதியெல்லா நீங்கிப்போகு
முற்றதொன் றுரைக்கிறேன் முக்யமாக
வுரப்பான சீனப்பா தைலம்வாங்கே. (197)

## சீனப்பாதைலம் - ஓமத்தைலம்

தைலத்திற் சூரணத்தைக் குழப்பியுண்ணத்
தனதான சூலைவகை தவறுண்டோடு
மயிலொத்த விழிமாதே யின்னம்வேறே
யாச்சரியத் தைலமொன் றறையக்கேளு
பயிலொத்த வோமமொடு வசம்புகார்கோல்
பாங்காக விவைகளைநீ தைலம்வாங்கித்
துயில்பெற்ற முச்சரக்கைப் பொடித்திட்டேதான்
றுலங்கவே குழப்பியுண்பா யினிச்சொல்வோமே. (198)

Koviloor Digital Library



## சாரணைவேர்க் குழித்தைலம்

ஓமென்ற வியாதியெல்லாங் கடலேபுக்கு
முண்மையா யித்தைல முரைத்தோங்கேளு
நாமெனவே யதிற்குழைப்பி யுண்ணும்போது
நாடாது கிரந்திகுஷ்ட நளினமாகும்
வாமென்ற சன்னியொடு வாதமேகும்
வளமான வின்னமொரு வரிசைசொல்வேன்
றாமென்ற சாரணைவேர் தனையிடித்துத்
தனதாகக் குழித்தைலம் வாங்கிடாயே. (199)

வாங்கியே வேரனைத்துந் தைலமாக
மைந்தனே யெடுக்கிறதோர் மார்க்கமாகுந்
தாங்கியே யவ்வேரின் சூரணத்தைத்
தானதிலே குழைத்துண்ணத் தீருநோய்கே
டீங்கான வாதமெல்லாஞ் சிதறிப்போகுந்
திசைவாய்வு மலபேதந் தீருந்தீரும்
பாங்கென்ற வித்தனையுஞ் சொன்னோமின்னும்
பகருவோம் வெண்டோன்றிக் கிழங்குப்போக்கே. (200)

## வெண்டோன்றிக் குழித்தைலம்

கிழங்கதனை நிழலுலர்த்தித் தைலம்வாங்கிக்
கெட்டியாய் வெண்டோன்றி சூரணித்தே
யுளங்குளிர விதையதிலே விரவித்தின்றா
லோடிவிடுங் குட்டமீ ரொன்பதுந்தான்
களங்கமற நீங்கிவிடு மண்டலத்திற்
காயசித்தி யுண்டாகுங் கவனமாகுஞ்
சுளம்போக வோராண்டு கொண்டாயானாற்
சகலசித்தி கைவசஞ்சஞ் சீவிபோலே. (201)

சஞ்சீவிபோலிந்த நூலைச் சொன்னோஞ்
சண்டாள மாபாவிக் கீயவேண்டா
நஞ்சுபோ லாகுமிந்த முறைதானப்பா
நடுங்கவே வியாதிகளை நாடிக்கொல்லுங்
கெஞ்சுவா ருலகுதனில் வாகடத்தைக்
கேட்டாலுங் கொடுக்கரிது கேள்வியன்றி
மிஞ்சவே யுபசரித்துத் தொண்டுசெய்து
வேணதன மீந்தாலு மீயார்தானே. (202)

Koviloor Digital Library



தானென்ற சேதியென்று சொல்லக்கேளுஞ்
சாதகமாய்ச் செந்தூரஞ் செய்துகொண்டே
வானென்ற லேகியங்கள் வளமாய்க்கூட்டி
வகையாக வநுபானந் தனையறிந்தே
ஏனென்ற கியாழமுட னிதனையெல்லா
மியற்றுவான் றொழிலாளி யிதமாய்த்தானே
பானதுமுன் பனிநீங்கும் பரன்மைபோலப்
பலபிணியு நீங்கிவிடும் பரிந்தீவாயே. (203)

ஈவதிந்த நூற்றொகைதா னிருநூற்றைந்து
மிகத்தினுள்ளோர் பிழைக்கவென் றிரங்கிச்சொன்னேன்
றாயிருக்கப் பிள்ளைக்குத் தயக்கமில்லாத்
தன்மைபோ லவுமிவற்றைச் சாற்றினேன்யா
னோய்மிகுந்து சாவதில்லை யொருநாளுந்தா
னுண்மையாய்ச் சரக்கையெல்லா நீற்றிக்கொண்டு
வாய்மூட லெண்ணெயொடு கிருதஞ்செய்து
வைத்திடுவா யநுப்பான வைத்யமென்னே. (204)

## வேறு

என்னவே யிகத்தி லுள்ளோர்க் கிரங்கியே சொன்னமார்க்க
முன்னமே யுரைத்த நூலின் முயற்சியா மிந்தசூத்ரம்
வன்னமாம் பாரு லோக மாரண மாகச்செய்ய
வன்னமே சொன்னோமிந்த வைத்யபூ ரணமு முற்றே. (205)

## அகஸ்தியர் திருவாய்மலர்ந்தருளிய
## வைத்திய பூரணம் 205
முற்றிற்று

Koviloor Digital Library

உ

பரமபதி துணை

### அகஸ்தியர் திருவாய்மலர்ந்தருளிய பூரணம் 205க்கு

# சூஸ்திரச் சுருக்கம் 21

கேளப்பா நவலோக மாரணந்தான்
கெடியான வயித்தியமா மிருநூற்றஞ்சில்
தேளப்பா கொட்டுதல்போ லிந்தச்சூஸ்த்ரம்
செப்புவே னிரும்புக்குத் தாரங்கெந்தி
வாளப்பா வெள்ளியிரு வங்கத்துக்கு
மால்தேவி வெடியுப்பு வெள்ளைசீனம்
சூளப்பா செம்புக்குக் கெந்திவங்கம்
சூதமொடு துருசுவெள்ளை சாரமூன்றே. (1)

## ஏகமூலிகைக்குப் பூசமருந்து

சாரமது நாகமதைத் தாக்கிக்கொல்லும்
சதாசிவமாந் தங்கமது கண்டால்நீறும்
காரமொடு அப்ரேகம் நிமிளைசாகும்
கண்டபடி பித்தளையைக் காட்டிக்கொல்லும்
பாரமடா வேகமூ லிகைக்குக்கேளு
பாஷாணம் நவச்சாரஞ் சீனம்பூரம்
வீரமொடு புளுகுவெடி யுப்புக்காரம்
விதமான சூதமொடு பூநீர்கெந்தி (2)

கெந்தியுடன் வகைவீதஞ் சமனாய்ச்சேர்த்துக்
கெடியான பழச்சாற்றி லாட்டிமைபோல்
பந்திவிட்டுச் செய்யாதே மருந்தைப்பூசி
பச்சிலையில் நீரும்முன் பகர்ந்ததெல்லாம்
முந்தியிந்தக் குருசெய்தா லுறுதியாகும்
முறையான வயித்தியநூ லொன்றும்பொய்யா
வந்தியென்ற துருசுநீர் கூடச்சேரு
வாகான வயித்தியத்துக் காணிதானே. (3)

Koviloor Digital Library



## சவுரிவேர்த்தைலம்

*தானென்ற தயிலத்தின் மருந்துசொல்வேன்*
*சாற்றுவேன் சவுரிவேர்த் தயிலந்தன்னை*
*நானேதா னதிவிடையங் கருஞ்சீரகம்*
*நலமான மரமஞ்சள் பலமரைதானரைத்து*
*ஊனேதா னெண்ணையிலே கூடப்போடு*
*ஓகோகோ வில்லைவேர்த் தயிலத்துக்கு*
*நானென்ற கடுக்காயுங் கஸ்தூரிமஞ்சள்*
*நலமான ஏலஞ்சந் தனமுமாமே.* (4)

*ஆமப்பா வகைக்குக்காற் பலமரைத்துக்காச்சு*
*அப்பனே வேங்கையிட தயிலத்துக்கு*
*நாமப்பா மிளகுஉள்ளி யோடேநீயும்*
*நற்சீரா விலாமிச்சம் வேருங்கூட*
*வாமப்பா வகைவகைக்குப் பலமரைத்துப்போடு*
*வகையான வெட்டிவேர்த் தயிலத்துக்குத்*
*தேமப்பா அதிமதுரங் கருஞ்சீரகந்தான்*
*தேவதாரங் கடுக்காய்வகைக் கரைப்பலந்தான்போடே.* (5)

## வேம்புத்தைலத்துக்குப் போடுமருந்து

*போடப்பா வேம்பினிட தைலத்துக்குப்*
*புகழான ஏலமொடு யிலந்தைவேரும்*
*நாடப்பா பழம்பாசி அக்ராகாரம்*
*நலமாக வகைக்குப்பல மரைத்துப்போடு*
*போடப்பா குருந்தொட்டித் தைலத்துக்கு*
*பொங்கமுள்ள சுக்குஒன்று யேலமொன்று*
*ஆடப்பா வகைக்குப்பல மரைத்துப்போடு*
*ஆகவே பதமாகக் காய்ச்சுகாய்ச்சே.* (6)

*காய்ச்சடா கொடிவேலித் தைலத்துக்கு*
*காணடா கருஞ்சீரகம் நற்சீரகந்தானும்*
*தாச்சடா தாளிசப்பத் திரியுங்கூடத்*
*தாணிக்காய் வகைக்குப்பல மரைத்துப்போடு*
*வீச்சடா சீரகத் தைலத்துக்கு*
*விதமான கார்கோலரிசி கற்கண்டுமிளகு*
*ஆச்சடா கருவேம்பி னிலையின்தண்டு*
*அவைவகைக்குப் பலவீத மரைத்துப்போடே.* (7)

Koviloor Digital Library



அரைத்துமே சூரிவேர்த் தைலத்துக்கு
அப்பனே சுக்குடனே வேம்பினிடபிசினும்
குறைத்துமே போகாமல் காடிகூட்டி
குணமாகத் தானரைத்துப் போடுபோடு
உரைத்துமே ஆச்சப்பா உசிலுடையபிசினும்
ஒகோகோ வகைக்குப்பல மரைதான்போட்டு
நிறைத்துமே யித்தைலம் பாகமாக
நேர்மையுடன் றானிருக்கும் முடித்துப்போடே. (8)

போடப்பா கீழ்க்காய்நெல்லித் தைலத்துக்குப்
போடுவாய் வேர்ப்பூமிச் சர்க்கரையுங்கூட
வேடப்பா பலமொன்று அரைத்துச்சேர்த்து
விதமான கடுக்காயும் வேம்பினிடபிசினும்
காடப்பா பலமரைத்து மூன்றுங்கூட்டிக்
காடிவிட்டுத் தானரைத்துக் கலக்கியேதான்
நாட்டப்பா தைலமதைச் செய்துகொண்டு
நலமான சட்டிதனி லூற்றிப்போடே. (9)

போடப்பா சங்கம்வேர்த்தைலத்துக்கு
புகழான மிளகுடனே கருஞ்சீரகமேலம்
நாடப்பா மாச்சக்காய் கூட்டியேதான்
நாட்டியரை வகைக்குப்பல வீதங்கூட்டி
பாடப்பா எண்ணெயிலே அரைத்துப்போடு
பதமாகப் பருவமுடன் காய்ச்சியேதான்
கூடப்பா சட்டிதனி லிருத்துக்கொண்டு
கூடும்வரை காச்சலற ஆறவையே. (10)

காய்ச்சப்பா அமுக்கிராவேர்த் தையிலத்துக்கு
காடியுடன் பழச்சாரும் நொச்சிச்சாறும்
மேச்சப்பா சுகமாக எருக்கின்பூச்சாறும்
மேன்மையுட னாட்டியே வகைக்குத்தானும்
வாச்சப்பா ஒன்றுக்குச் சாறுபடிகாலாய்
வகையாகக் கிண்டியே கூட்டிக்காய்ச்சி
மாச்சப்பா தைலத்தின் பாகந்தன்னை
மற்றவர்க்குக் கிண்டுமுறை செப்பிடாதே. (11)

Koviloor Digital Library



கிண்டப்பா இஞ்சியுட தயிலத்துக்குக்
கெடியான நொச்சிச்சாறு பசுவின்பாலும்
கிண்டவே வகைக்குஅரைப் படியாய்விட்டு
கெசடில்லா யெண்ணெயுடன் காய்ச்சிக்கொள்ளு
அண்டருக்குந் தெரியாது இந்தப்பாகம்
அப்பனே வெளியாகச் சொல்லிவிட்டேன்
கண்டுகொண்ட பேர்களுக்குக் கிட்டுங்கிட்டும்
கணக்கறியா னித்தைலங் காய்ச்சுவானோ. (12)

காச்சப்பா செம்முள்ளித் தயிலத்துக்கு
கண்டகருஞ் சீரகமுங் கற்றாளைவேரும்
வாச்சப்பா வகையுடனே கார்கோலரிசி
வகைக்கரைப் பலமரைத்துத் தாண்டிக்காய்ச்சு
நீச்சப்பா தைலத்தின் பாகந்தானும்
நேரான மெழுகுபதந் தெரிந்துகொண்டு
பாய்ச்சப்பா பாண்டத்தில் வடிதான்கட்டிப்
பண்புடனே மாயவலை தன்னைத்தாண்டே (13)

தாண்டவே யிருவேலித் தயிலத்துக்குச்
சார்வான பழச்சாரும் கையான்சாறும்
தீண்டவே தாளிச்சாறு வகைக்குக்காற்படிதான்
திறமாக வேயரைத்து எண்ணெயிற்போட்டு
வேண்டியதோர் தீயதனைச் சிறிதெரித்து
மெழுகுபதங் கண்டறிந்து தைலந்தன்னை
ஆண்டவனைத் தோத்திரித்து இறக்கிவைத்து
அப்பனே காச்சல்தனை ஆறவையே. (14)

காச்சப்பா நற்கரிப்பான் தயிலத்துக்கு
கரைத்தகற்றா ளஞ்சாறு நெல்லிக்காய்ச்சாறு
நீச்சப்பா நினைவாக வகைக்குக்காற்படியாய்
நீட்டியகஸ் தூரிமஞ்ச ளரைப்பலந்தானாகும்
ஏச்சப்பா சாதிக்கா யரைத்துப்போட்டு
எண்ணெயுடன் தான்கரைத்து வைத்துக்கொண்டு
வாச்சப்பா அடுப்பதனி லேற்றிநன்றாய்
வகையுடனே காச்சியதை இறக்கிவையே. (15)

Koviloor Digital Library



*காய்ச்சடா அகிற்கட்டைத் தயிலத்துக்*
*கனமான அதிமதுரந் தாணிக்காயும்*
*வீச்சடா வகைக்குப்பல மரைத்துப்போடு*
*வீறான அருகம்வேர்த் தயிலத்துக்கு*
*கூச்சப்பா கோரையுட கிழங்குதானும்*
*கூறான அமுக்கரா கூடக்கூட்டிப்*
*பூச்சப்பா பூமிச்சர்க் கரைக்கிழங்கு*
*புகாழன இம்மூன்றும் வகைக்குக்காற்பலமாய்.* *(16)*

*நிரைத்துநீ கல்வத்தி லாட்டிக்கொண்டு*
*நேராக எண்ணெயிலே அரைத்துப்போடு*
*அரைத்துநீ போட்டிடுவா யப்பாகேளு*
*அருளான கொடுப்பையுட தயிலத்துக்கு*
*அரைத்துநீ அதிமதுரம் கரியசீரகமும்*
*அழகான செங்கழுநீர் கோஷ்டம்பாலும்*
*உரைத்துமே வகைக்குப்பல மரைத்துப்போடு*
*உத்தமனே சென்னகரைப் பட்டைக்குக்கேள்.* *(17)*

*கேளப்பா வேப்பெண்ணெய் படிதானொன்று*
*கிருபையுள்ள வசம்புவெள் ளுள்ளிபலமொன்று*
*சூளப்பா வெள்ளைவேர் பலந்தானொன்று*
*சுருளவே கூட்டிநன்றா யரைத்துக்கொண்டு*
*நாளப்பா எண்ணெயிலே சேர்த்துக்கொண்டு*
*நலம்பெறவே பதமாப்பாண் டத்திலூற்றி*
*வாளப்பா அடுப்பதனி லேற்றிநீயும்*
*மைந்தனே சிறுதீயா லெரித்துக்காச்சே.* *(18)*

*காய்ச்சடா அபினியுட தயிலத்துக்குக்*
*கண்மணியே சங்கிலைகற் றாளைரெண்டும்*
*வீச்சடா வகைக்குக்காற் படிவீதந்தான்*
*விதமான தயிலத்தி லிட்டுமேதான்*
*காய்ச்சிவிடும் பண்டிதரே யிருப்பவல்தயிலத்துக்கு*
*கறிமஞ்சள் கஸ்தூரி மஞ்சளாமே*
*வாச்சுதென அடுப்பேற்றிச் சிறுதீயாலே*
*மைந்தனே மெழுகுபதத் துடனேதானும்.* *(19)*

Koviloor Digital Library



மஞ்சளுட னிருவகையும் பலவீதங்கூட்டி
மாண்புடனே அரைத்துமே எண்ணெயதிற்சேர்த்துத்
தஞ்சமுட னெண்ணெய்தனைக் காய்ச்சிமூழ்கச்
சகலபிணி தீர்ந்திடுவ தல்லால்வேறே
வஞ்சியரி னாசைதனைத் தள்ளவேணும்
மகத்தான பெரியோரிம் முறையைத்தானே
எஞ்சலுடன் செய்துமவர் பிழைத்தாரப்பா
என்மகனே நாமறிந்த விதந்தான்பாரே. (20)

நாமப்பா பற்பமுதல் தயிலம்நன்றாய்
நன்றாகக் கருக்கிடையும் பாகஞ்சொன்னேன்
தாமப்பா பூரணத்தின் இருநூற்றஞ்சில்
தவறாமல் செய்தாக்கா லிதற்கீடாமோ
வாமப்பா சுருக்கமதைத் தெரிந்தோன்றானே
வைத்தியத்தில் தேற்சியென்று மதித்துக்கொள்ளே
நாமப்பா வெளிதோணச் சொன்னேன்பாரு
நல்சுருக்க மிருபத்து ஒன்றுமுற்றே. (21)

## வெண்பா

வங்கம்செம் பொன்னுக்காம் மாச்சீயம் வெள்ளிக்காம்
எங்கும்லிங் கங்க ளிரும்புக்காம் - தங்கத்தைத்
தாரமே கொன்றுவிடும் தள்ளாத போகமதாம்
சேரும்செம் புக்குகெந்தி தேர்.

## அகஸ்தியர் வைத்திய சூஸ்திரச்சுருக்கம் 21

முற்றிற்று

Koviloor Digital Library



## உரைநடைப் பகுதி

# அகத்தியர் வைத்திய பூரணம் 205

## காப்பு

ஆதிமுதலாக உள்ள பூரணமாயிருக்கும் பொருளை போற்றி வணங்குகிறேன். அம்பிகையின் பாதங்களை அல்லும் பகலும் போற்றி வணங்குகிறேன். ஒளி மிகுந்த சற்குருவின் பாதங்களை போற்றி வணங்குகிறேன். கலைவாணியை சரணடைந்து வணங்குகிறேன். வேதாந்தத்தை விளக்கும் ஒளியாகிய கமலத்தை போற்றி வணங்குகிறேன். ஆறு ஆதாரங்களைப் போற்றி வணங்குகிறேன். கணபதியின் பாதங்களை போற்றி வணங்குகிறேன்.

## பிணிக்குறிப்பு

1. பிணிகள் உண்டாகும் விதத்தைக் காண்பாயாக. மூலாதாரத்தில் சூடுண்டானால் ஆண் பெண் பொறிகளாகிய சனன உறுப்புகளில் சூடுண்டாகும். மேகத்தின் சிரசு வற்றிப்போய் வெற்றிடமாகும். அதில் நீர்கலந்து கன ரோகங்களாகிய பீனிச நோய் உண்டாகும். வாய்வினால் சூலை ரோகம் தோன்றும். அது வாதத்தினாலும் உண்டாகும். பித்தத்தினால் கிராணி ரோகம் உண்டாகும். வாய்வினால் குன்ம ரோகங்கள் உண்டாகும். அதிக குளிர்ச்சியினால் கபரோகங்கள் தோன்றும்.

2. அதிகப்படும் வாதக்குற்றத்தினால் விரணங்கள் உண்டாகும். அஸ்தியாகிய எலும்பில் சூடு அதிகமானால் சுரங்கள் தோன்றும். அதிக பெண்போகத்தினாலும், போதை வஸ்துக்களினாலும் மேகரோகமுண்டாகும். நான்காயிரத்துக்கும் அதிகமாக உள்ள ரோகங்களில் நீரிழிவு மேகநோய்கள் இருபத்தியொன்றில் ஒன்றாக உண்டாகும்.

Koviloor Digital Library



3. பித்தத்தால் உஷ்ணரோகமும் வாதத்தால் சீத ரோகங்களும், கபத்தால் கபரோகங்களும், திரண்டு எழுந்து அதிகப்பட்ட வாயுவினால் இம்மூன்று ரோகங்களும் உண்டாகலாயிற்று. தசவாயுக்களாகிய பத்து வாயுக்களும் தன்னிலை மாறியதால் ஒன்றுக்கொன்று தொந்தமாகி கொடிய கனல் வாதமாகி, விந்துவை பாதிக்கலாயிற்று. பாதித்த விந்து மேகநோயை உண்டாக்கலாச்சு. அந்த மேகநோய் பித்தம் மற்றும் சிலேற்பனமாகிய கபத்தில் இருந்து நோய்களை உண்டாக்கும்.

4. இந்த நூலுக்கு நிகர் சஞ்சீவியாகும். இதனை அறிந்து நூலைப்படித்தால் சித்தர்க்கு ஒப்பாகலாம். இந்த நூலைப் படித்து வைத்தியம்செய்ய நோய்கள் எல்லாம் தீரும். பொன், வெள்ளி போன்ற உயர்ந்த மருந்துகள் இதனுள்ளே உள்ளது. இந்த நுணுக்கம் நல்லோர்க்கு கிடைத்து தர்மத்தை நிலைநாட்டவேண்டும். இந்த நூலைப்பார்த்து வைத்தியம் செய்தால் பிரம்ம ரிஷிக்கு ஒப்பாகும்.

5. இந்த நூலில் மூலிகைகள், கிருதங்கள், சூரணங்கள், தைலங்கள், பற்பங்கள், ரசாயனங்கள், குடிநீர் ஆகியவற்றைக் கூறியுள்ளேன். இம்முறைகள் வெகு சுலபம். இளஞ்சூரியனைப்போல உள்ள செந்தூரங்களின் செய்முறைகளை எளிதாகக் கூறியுள்ளேன்.

6. மேலும் தைலங்கள், செந்தூரங்கள் ஆகியவற்றை சித்தர்களுக்கும், சிவயோகிகளுக்கும், வைத்தியர்களுக்கும் இருநூற்றி ஐந்து பாடல்கள் கொண்ட இந்நூலில் கூறியுள்ளேன். ரோகங்களைத் தீர்க்க செந்தூரம் முந்நூற்றில் வழிமுறைகள் கூறினேன். அதுபோல அசாத்திய நோய்கள் தவிர்த்து மற்றவை எல்லாவற்றுக்கும் இந்த நூலை வைத்துக்கொண்டு வைத்தியத்தை விரும்பிச் செய்யவேண்டும்.

7. வைத்தியம் செய்வதற்கு சூட்சுமமாய் இந்த நூலைக் கூறியுள்ளேன். உலகில் பிழைப்பதற்கு எளிதாக இந்த நூலில் கூறியவற்றை செய்து வைத்தியம் பார்க்கலாம். அதிக செலவில்லாமல் பொருள் வீணாகாமல் பெரியோர்க்கும் எளியோர்க்கும் வைத்தியம் செய்யலாம். வீணான சாத்திரங்களைக் கண்டவர் மயங்கிப் போவார்கள். பாலிலுள்ளே நெய் இருப்பதுபோல செந்தூர பற்பங்களின் மகிமையை செய்து பார்த்து உணர்ந்துகொள்ள வேண்டும்.

8. பற்பம் செய்கின்ற வகையைக் கேட்பாயாக! பல நூல்களில் ஏற்கனவே கூறியுள்ளேன். காரசாரங்களை பற்பம் செய்யும்

Koviloor Digital Library



முறைகளை கூறுகிறேன். மாணாக்கனுக்கு மனத்தெளிவு எப்பொழுது பிறக்கிறதோ அப்பொழுதே மருந்துகள் செய்ய தயக்கம் உண்டாகாது. எனது நூலை எளிதாக எடுத்துக் கூறவேண்டாம். மருந்துசெய் நுட்பங்கள் எந்நூலில் தப்பாது. நுணுக்கமாக இருந்து செய்யும் தொழிலில் உண்மையைக் கண்டுணர்வாயாக.

## லோக பற்பம்

9. அயத்தகடு ஒன்றை நெல் கனமுள்ளதாக ஒரு சாண் அகலமும் ஒரு சாண் நீளமுள்ளதாகவும் அடித்து வைத்துக்கொள்ளுவும். வீழிவேர் ஒருபலத்தை (35 கிராம்) எடுத்து மெழுகுபோல் நன்கு அரைத்து தகட்டின்மேலே பூசவும். அதனை அகலில் வைத்து சீலைசெய்து கசபுடம் இடவும். திருநீறு போல உயர்ந்த பற்பமாகும். அதனை எடுத்து பதனப்படுத்தவும்.

10. பத்து எலுமிச்சம்பழத்தை எடுத்து நான்காகக் கீறி, ஒரு சட்டியிலிட்டு கரிசாலைச் சாறு ஒரு நாழியும். காடி ஒரு நாழியும் விட்டு அவித்து உலர்த்தி வைத்துக்கொள்ளவும். அதில் ஒரு கீற்றுடன் மேற்கூறிய லோகபற்பத்தையும் சேர்த்து உண்டுவர பாண்டுநோய் தீரும். குட்டம், குறைநோய் சூலை ஆகியன தேனில் கொள்ளத் தீரும்.

## காந்த பற்பம்

11. காந்தத்தை தூள்செய்துகொண்டு சிறியாநங்கை மூலிகையை அமுரிநீர் விட்டு இடித்து பிழிந்த சாற்றை சிறுக சிறுக வார்த்து சாறுவற்றும் வரை நன்கு அரைக்கவும். பிறகு மூன்று வில்லைகள் செய்து வெயிலில் வைக்கவும். வில்லை நன்கு காய்ந்தபின்பு அகலிலிட்டு சீலைமண் செய்து கசபுடம் (1000 வரட்டி) இடவேண்டும். நன்கு நீறி பற்பமாகும்.

## அனுபானம் மற்றும் தீரும் நோய்கள்

12. சுக்கை நன்குபொடிசெய்து அதற்கு மாதுளங்காய் சாறுவார்த்து அரைத்து கிண்டி எடுத்துக்கொள்ளவும். சுக்கு விழுதில் காந்தபற்பம் பணவெடை உட்கொள்ளவும். ஒரு மண்டலம் உட்கொள்ளவும்

Koviloor Digital Library



13. கிராணி, சோகை, பாண்டு சுக்குவிழுதில் உட்கொள்ளத் தீரும். நீர்க்கிரிச்சரத்திற்கு சீந்தில் சூரணத்தில் அனுபானித்து தரவேண்டும். மூலம், கிராணி வகைக்கு லோகபற்பத்தையும், காந்தபற்பத்தையும் கூட்டி சஞ்சீவி என்னும் மூலிகை சூரணத்தில் அனுபானித்துக் கொடுக்கவும்.

(இங்கு அயம், காந்தம் ஆகியவற்றின் அளவு கூறவில்லை எனினும் 35 கிராம் அளவிற்கு எடுத்து மருந்து செய்வது உத்தமம்)

## தாம்பிரச் செந்தூரம்

14,15. தாம்பிரக்காசு ஒன்றை எடுத்து முதலில் நெல் கனம் உள்ளவாறு தகடாக தட்டிக்கொள்ளவும். பிறகு ஆடாதோடை மூலிகையின் வேரையும் வெண்ணொச்சி வேர் ஆகிய இரண்டையும் சமனாக எடுத்துக்கொள்ளவும். பிறகு அதனை குக்கில் பிசினால் நன்கு அரைத்து தாம்பிரத் தகட்டின்மேலே மேலும் கீழும் பூசவும். அதனை அகலில் வைத்து மூடி சீலைமண் செய்து கசபுடம் (1000 வரட்டி) போட இளஞ்சூரியன்போல் செந்தூரமாயிருக்கும். எட்டு வகை குன்மமும் தீர அஷ்ட சூரணத்துடன் செந்தூரத்தைக் கலந்து தேனில் குழைத்து உண்ணவும்.

## இரசபற்பம்

16. சுத்திசெய்த பாதரசத்தினை சிவகரந்தைச்சாறு விட்டு மூன்று நாள் அரைக்கவும். மூன்று நாள் அரைத்த பின்பு அடைபோல ஒரேவில்லையாக தட்டி உலரவைக்கவும். பின்பு அதனை உலரவைத்து அகலிலிட்டு சீலைமண் செய்து பத்துவரட்டியில் புடமிட நீறிப்போகும். பணவெடை உட்கொள்ள சூலை 18ம் தீரும். (பாதரசம் அளவு 1 பலம் அதாவது 35 கிராம் இருப்பது உத்தமம்)

17. பனைவெல்லத்தில் பணவெடை பற்பத்தை வைத்து பத்து நாட்கள் காலை மாலை உட்கொண்டுவர பதினெட்டு குட்டம், அரையாப்பு, கிரந்தி, சயரோகம் ஆகியன தீரும். இனி மேகவகை தீர வெள்ளீய பற்பமுறையை கூறுகிறேன்.

## வெள்ளீயபற்பம்

18. ஒரு பலம் (35 கிராம்) அளவுள்ள வெள்ளீயக்கட்டியை எடுத்து நெல் கனமுள்ள தகடாக அடித்துக் கொள்ளவும். ஒருபலம்

Koviloor Digital Library



ஆடாதொடை மூலிகையின் வேரும், வெண்தோன்றிக் கிழங்கின்வேர் ஒரு பலத்தையும் எடுத்து நன்கு கலந்து அரைக்கவும். பிறகு அதனை வெள்ளீயத் தகட்டிற்கு பூசி அகலில் வைத்து மேலகல் கொண்டு மூடி சீலைமண் செய்து கசபுடம் இடவும். வெள்ளீயம் வெளுத்து நீறும். மேகவகை இருபதுக்கும் பணவெடை உட்கொள்ளவும்.

19. ஆவிரை சமூலத்தை (காய், கனி, இலை, பூ, வேர்) சூரணம் செய்து தேன்விட்டு குழைத்து அதில் வெள்ளீயபற்பம் பணவெடை வைத்து உட்கொள்ள நீர்சுரப்பு, கல்லடைப்பு, கிரிச்சனங்கள், சதையடைப்பு தீரும். பிற மேகநோய்களுக்கு அனுபானம் அறிந்து தர நோய்கள் அகலும்.

## காரீய பற்பம்

20. காரீயத்தை முன்பு கூறிய வெள்ளீய பற்பம் செய்தது போலவே செய்யவும். பற்பமாகும். காரீய பற்பத்தினால் சூலை, குட்டம், சுளைப்புள்ள கிரந்தி, பிரமேகம், தேகத்தில் உண்டாகும் காந்தல், நீர்க்கடுப்பு, உடல் வரட்சி தீரும். தேகத்தில் உஷ்ணம் எல்லாம் பறந்து போகும்.

## வெண்கல பற்பம்

21. வெண்கலத்தை தகடாகத் தட்டி பசளையிலையை அரைத்து கவசம் செய்து உலர்த்தவும். பிறகு அதனை அகலில் வைத்து மூடி சீலைமண் செய்து கஜபுடம் இட வெண்கலம் நீறி பற்பமாகும். இப்பற்பத்தை பணவெடை நெய், தேனில் சேர்த்து உட்கொள்ள சூலை, வாயு, குன்மம் தீரும்.

22. சயரோகம், இருமல், உளமாந்தை அகியவையும் வெண்கல பற்பத்தால் தீரும். நேர்மையாக உள்ளவர்களுக்கு இந்நூல் கிடைத்தது என்றால் யோகவான் ஆவார்கள். இந்நூல் வைத்தியத்துக்கு ஆதியாகும். நூலில் கூறியுள்ளபடி செய்தால் பற்பத்தினை எளிதில் செய்து முடிக்கலாம். செய்வதற்கு எளிதாக உள்ள முறைகளையே கூறியுள்ளேன். வேறெந்த நூலையும் தேடி அலையவேண்டாம்.

Koviloor Digital Library



## தரா பற்பம்

23. அலையாமல் இன்னுமொரு அதிசய செய்தியைக் கூறுகிறேன் கேட்பாயாக. தராவை தகடாகத் தட்டி அதற்கு தும்பையிலையை அரைத்துபூசி கஜபுடம் இடவும். தராத்தகடு நீறிப்பற்பமாகும். நிலவாகை சூரணத்தினை தேன்விட்டு குழைத்து அதில் தராப்பற்பத்தை வைத்து ஒரு நாளைக்கு இரு நேரம் வீதம் பத்து நாட்கள் தரவும். திராபற்பத்தினால் நீர்க்கிரிச்சரம், வண்டுகடி, சில்விஷங்கள், குன்மம், சயரோகம், குட்டம், சூலை பதினெட்டு ஆகியன தீரும்.

## பித்தளை பற்பம்

24. பித்தளை பற்பத்தின் செய்முறையைக் கேட்பாயாக. பித்தளை தகட்டிற்கு காஞ்சொரி செடியின் வேரை அரைத்து கனமாக பூசி கஜபுடம் இட பித்தளை நீறிப்போகும்.

25. பித்தளை பற்பத்தினால் தீரும் நோய்களை கேட்பாயாக. வாய்வு குன்மம், கிராணி, மூலம், பாண்டு, நீர்சுரப்பு, வாய்நீரோடல், குடல்வாய்வு, பாரிசவாய்வு, ஆனந்த வாய்வு ஆகியவை அனுபானமறிந்து தர தீரும்.

## ஒழுகறை பற்பம் - எஃகு பற்பம்

26. ஒழுகறை என்னும் எஃகை தூய்மை செய்து கஸ்தூரியை அரைத்து அதன்மேல் பூசி கஜபுடம் போட பொருமி நீறும். உலகமே வியந்து போற்றும் இந்த பற்பம் வைத்தியர்களுக்கு எளிதில் கிடைக்குமோ கிடைக்காது. அத்தகைய பற்பத்தை இஞ்சிசாறும் தேனும் கலந்து அனுபானித்து தர பாண்டு, வீக்கம், சோகை, மகோதரம், நீராம்பல் ஆகியன தீரும். நரை திரை தீரும். எமனும் அருகில் வரமாட்டான். முயற்சியுடைய வைத்தியன் நீ என்றால் இதனை செய்து பார்ப்பாயாக.

## பால்கருடக்கல் பற்பம்

27. கருடக்கல் பற்பம் செய்யும் முறையை கேட்பாயாக. கெட்ட குணங்கள் கொண்ட வைத்தியன் மருந்தை சரியாக முடிக்கமாட்டான். பல நூல்களைப் பார்த்தாலும் எந்நூலைப் பார்க்காமல் நாய் போல் அலைவான்.

Koviloor Digital Library



28. நாய்போல் அலைந்து திரிவானே தவிர வைத்தியம் செய்துபிழைக்க அறியமாட்டான். தீமைகள் அதிகம் உள்ள இவ்வுலகில் பிணியை தீர்க்க பெருநூலைப் பார்க்கவேண்டும். ஆனைப்புல் கிழங்கை அரைத்து பால்கருடக்கல்லுக்கு கவசம்செய்து கெஜபுடம் போட நீறிப்போகும். வெண்ணெயில் இருவேளை உண்டுவர உஷ்ணரோகங்கள் எல்லாம் தீரும்.

29. வெண்ணையில் பால்கருடக்கல் பற்பத்தை உண்டுவர கணரோகம் தீரும். உடல் எல்லாம் குளிர்ச்சி உண்டாகும். எள்ளெண்ணெயில் உண்டுவர கடுப்பு, எலும்புருக்கி, உள்வரட்சி, அஸ்திசுரம், உலர்த்தல் போகும். பால்கருடப்பற்பத்தினால் வெட்டை நோய் தீரும்.

## கல்நார் பற்பம்

30. கல்நார் பற்பம் செய்முறையைக் கேட்பாயாக! கோங்கிலவம்பட்டையை எடுத்து பஞ்சுபோல் இடித்து ஒரு பெரிய அகலில் வைத்து நடுவே கல்நாரை இட்டு மேலே மீண்டும் கோங்கிலவம்பட்டையை இடவேண்டும். பிறகு வேறு ஒரு அகலைக்கொண்டு மூடி சீலைமண் செய்து கஜபுடமிட கல்நார் நீறி பற்பமாகும்.

31. மேற்கூறியவாறு செய்யப்பட்ட பற்பத்தை தேனிற்கொள்ள வேருடன் அசைந்தபல் இறுகிப்போகும். தூதுவளை லேகியத்தில் இருபொழுது உண்டுவர கபத்தை அறுத்துப்போடும். உஷ்ணத்தை அடக்கிவிடும். சயம், இருமல், சுவாசகாசம், மந்தாரகாசம் தீரும்.

## நாகபற்பம்

32. நாகபற்பத்தின் இயல்பைக் கேட்பாயாக. சிறுகண் நாகத்தினை சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக்கொண்டு காட்டாமணக்குப் பாலில் அரைத்து வில்லைதட்டி காயவைக்கவும். பிறகு அகலிலிட்டு மூடி சீலைமண் செய்து கஜபுடம் இடவும். இந்நாக பற்பத்தினால் கிராணி, மூலரோகம், வயிறெரிவு, நெஞ்செரிவு, வாய்வு ரோகம் ஆகியன தீரும்.

33. மேற்கூறிய நோய்களுக்கெல்லாம் அனுபானம் கேட்பாயாக, கடுக்காய்தோல், தான்றிக்காய் தோல், நெல்லிவற்றல், சுக்கு, மிளகு, திப்பிலி, கஞ்சா ஆகியவற்றை பொடித்து தேன் ஊற்றிக்

Koviloor Digital Library



கிண்டி எடுத்துக்கொள்ளவும். இதனை அனுபானமாக சேர்த்து நாகபற்பத்தை ஒரு மண்டலம் உண்ண முன்பு கூறிய நோய்கள் அனைத்தும் தீரும். இனி வெள்ளி பற்பத்தின் செய்முறையை கேட்பாயாக.

## வெள்ளிப்பற்பம்

*34.* வெள்ளி ரூபாய் ஒன்றை எடுக்கவும். செம்முள்ளிக்கீரை இலையை அரைத்து குகையும், அதன் வாய்க்கு ஏற்ற மூடியையும் செய்து உலரவிடவேண்டும். பிறகு அந்த குகைக்குள் வெள்ளிரூபாயை வைத்து மூடியை கொண்டு மூடி சீலைமண் செய்து ஒரு முழம் அளவுள்ள குழிவெட்டி எருக்களை அடுக்கி புடம் இடவும். வெள்ளி பற்பமாகும். சிமிளில் பதனம் செய்யவும்.

*35.* குன்மம், நீர்க்கட்டு, சதையடைப்பு, மயக்கம், நெஞ்சிலுள்ள கபம், மூச்சுதிணறல், மூக்கில் ஏற்படும் நீர்ப்பாய்ச்சல், பீனிசங்கள், மண்டைசூலை, புண், புரைகள் ஆகியன வெள்ளிப் பற்பத்தை அமுக்கிரா சூரணத்துடன் சேர்த்து தேன்விட்டு குழைத்து உண்ண தீரும்.

## தங்கபற்பம்

*36.* தங்கக்காசு ஒன்றை எடுத்து * பனிநாக்கி மூலிகையை நன்கு மைபோல அரைத்து காசுக்கு கவசம்செய்து அகலில் வைத்து மேலகல் கொண்டுமூடி சீலைமண் செய்து கஜபுடம் இடவும். தங்கம் நீறி பற்பமாகும்.

* இம்மூலிகை பொதிகை மலையில் காணப்படும் என டி.வி. சாம்பசிவம் பிள்ளை அகராதியில் கூறப்பட்டுள்ளது.

*37.* இந்த பற்பத்தினால் எண்ணிக்கையில்லாத சித்துக்கள் ஆடலாம். வகையறிந்து வேதைமார்க்கத்தில் சென்றால் உலோகங்களில் பாய்ச்ச ஏழரை மாற்று ஆகும். வியாதிகள் எல்லாவற்றுக்கும் அனுபானம் அறிந்து தரவேண்டும்.

*38.* தங்கபற்பத்தை கண்டங்கத்தரி லேகியத்திற் கொள்ள கபநோய்கள் தொண்ணூற்றாறும் கூண்டோடு போகும். சயரோகம், காசரோகம், உளமாந்தைத் ஆகியன கூட்டோடு விலகும். திரிகடுகு லேகியத்தில் உட்கொள்ள குன்மம், மகோதரங்கள், வாயு, நீராம்பல், சூலை தலை நோய்கள், கண்ணோய்கள் தீரும். குட்டம், குறைநோய்கள் தீரும்.

Koviloor Digital Library



39. தங்கபற்பத்தை தேனில் இருபது நாள் உண்ண சூலை, கிரந்தி, குட்டம் தீரும். சீந்தில் சூரணத்தில் உட்கொள்ள நீரிழிவு, பிரமேகம் தீரும். நெல்லிக்காய் லேகியத்தில் உட்கொள்ள பித்தநோய்கள் தீரும்.

40. சிவனார் வேம்பு சூரணத்தில் தங்கபற்பத்தை உட்கொள்ள புண், புரைகள், சில்விஷங்கள், வண்டுகடி விஷங்கள் ஆகியன தீரும். தனி வேம்பு சூரணத்தில் உட்கொள்ள வாதநோய்கள் எண்பதும் தீரும். இதுபோல் அனுபானம் அறிந்து வழங்க நோய்கள் அனைத்தும் தீரும்.

41. தங்கபற்பத்தை உண்டுவர உடல் தங்கம்போல் ஒளிரும். இரும்பு பற்பமாகிய அயபற்பத்தை உண்டுவர உடல் இரும்பு போல் இறுகி நிற்கும். இதை தவிர்த்து அன்னமாகிய சோறு மட்டும் உண்டுவர உடல் அழுந்தி பாழாகும். உடலில் உள்ள சப்த தாதுக்கள் பிரிந்தால் வலிமை இழந்து போகும். மக்கள் உள்ள ஊரில் இருந்தால் தவம் பாழாய் போகும். பொன்னை மறந்தால் எந்த பலனும் இல்லை எனவே தங்கத்தை நீற்றி பற்பமாக்கி உண்பாயாக.

## கந்தகபற்பம்

42. கந்தக பற்பம் செய்முறையை கேட்பாயாக! சின்னி இலையை அரைத்து எலுமிச்சை காய் அளவு குகைபிடித்து வெயிலில் காயவிடவும். நன்கு உலர்ந்த பின்பு கந்தகக்கட்டி ஒன்றை எடுத்து சின்னியிலை குகைக்குள் வைத்து சில்லு கொண்டு மூடி சீலைமண் செய்து பத்துவரட்டியில் புடம் இடவும்.

43. பத்துவரட்டியில் புடமிட்டு எடுக்க கந்தகம் பற்பமாகி இருக்கும். இக்கந்தக பற்பம் உண்பதற்கு அனுபானத்தினைக் கேட்பாயாக. ஒரு நெல் எடை (2.5 மிகி) தேனில் உட்கொண்டுவர குட்டம், குறைநோய்கள், பல்லினால் கடித்த விஷங்கள், வாயு, வாதம் தீரும்.

44. கந்தக பற்பத்தினால் முன் கூறிய நோய்களுடன் வாதத்தினால் எழுந்த கிரந்திசூலை, வயிற்றுவலி, அதிக நீருள்ள மகோதரங்கள், பெண்களுக்கு உண்டாகும் கற்பநோய்கள், வீக்கமுள்ள பாண்டு ரோகம் தீரும். இடுப்புவலி, சந்துவாதம், தசையில் உள்ள நீர்கள் எல்லாம் தீரும்.

Koviloor Digital Library



## மண்டூரபற்பம்

45. மண்டூரத்திற்கு சொரியாசுணங்கை பச்சிலையை அரைத்துப் பூசி சிறிய மண்குகையில் வைத்து சீலைசெய்து கெஜபுடமிட கூகைநீறு நிறத்தில் நீறி பற்பமாகும். அதனை எடுத்து தேனை அனுபானமாக வைத்து உட்கொள்ளவும்.

46. மண்டூரபற்பம் பணவெடையை தேனிற்கொள்ள பாண்டு வகைகள், பொல்லாத வீக்கம், சயரோகம், மந்தாரகாசம், விஷநீர், விஷபாகம் எல்லாம் தீரும். அந்த அளவிற்கு மண்டூரபற்பம் வலிமையானது.

## அஞ்சனக்கல்பற்பம்

47. சிறுகீரையை நன்கு அரைத்து குகைபோல பிடித்து உலர்த்தவேண்டும். பிறகு அஞ்சனக்கல்லை அக்குகையினுள் வைத்து சில்லிட்டு சீலைமண் செய்து உலர்த்தவும். அதனை கஜபுடம் இட சங்குபோல வெளுத்து நீறும். தேனில் அஞ்சனக்கல் பற்பத்தை உண்டுவர மேகவகை இருபதும் தீரும்.

## தாளகபற்பம்

48. தாளகபற்பம் செய்முறையை சொல்கிறேன். புதிய தலை ஓட்டை தூள்செய்துகொண்டு அதனை சுண்ணாம்பு தெளிநீர்விட்டு அரைத்து குகைபோல் செய்யவும். பிறகு அதனாலேயே மேல்மூடி ஒன்றும் செய்யவேண்டும். அதனை நன்கு காயவைக்க வேண்டும். அதனுள் தாளகத்தை வைத்து மேல் மூடி கொண்டுமூடி சீலைமண் செய்து உலர்த்தவும்

49. அதனை பத்துவரட்டியில் புடமிட மல்லிகைப்பூ போல வெளுக்கும். இந்த பற்பத்தை தேனில் உட்கொள்ள சயரோகம், மந்தாரகாசம், உளமாந்தை இருமல், ஈளை ஆகியன கரைகடந்து ஓடிப்போகும்.

50. அனுபானங்கள் அறிந்து கொண்டு செய்தால் கடிவிஷமும் குறைநோய்கள் குஷ்டம், எலி விஷங்கள் எல்லாம் தீரும். அனுபானம் அறிந்து வைத்தியம் செய்யவும். சாதிலிங்கம் எளிதில் நீறாது. எட்டுத் திசைகளில் உள்ளவரும் முயற்சித்தாலும் எளிதில் ஆகாது. அதனை எளிதில் பற்பம் செய்யும் முறையை கூறுகிறேன் கேட்பாயாக.

Koviloor Digital Library



## சாதிலிங்க பற்பம்

51. சாதிலிங்கத்தை ஒரு கட்டியாக எடுத்து, சிவனார் வேம்பு மூலிகையின் வேர்ப்பட்டையை அரைத்துக் குகையாக செய்து, அதனுள் சாதிலிங்கக்கட்டியை வைத்து மூடி, சீலை மண் செய்து உலர்த்தவும். அதனை பத்து வரட்டியில் புடமிட நீறி வெளுத்துப் போகும். எடை குறையாமல் பற்பமாகியிருக்கும். நோய் அனைத்தும் தீர அனுபானம் ஒன்றைக் கேட்பாயாக.

52. சாதிலிங்க பற்பத்தை தேனில் உட்கொள்ள மேனி உறுதியாகும் குன்மம், வாயு, சன்னிவாதம், பாரிச வாய்வு, சூலை, ஈளை, இளைப்பு ஆகியன விரைந்து தீரும். மேலும் அனுபானங்களை அறிந்து வைத்தியம் செய்யவும்.

## வீரபற்பம்

53. வீரபற்பம் செய்முறையை கூறுகிறேன். அப்பக்கோவைக் கிழங்கினை குகைபோலச் செய்து அதில் வீரத்தினை வைத்து மூடி சீலைமண் செய்யவும்.

54. அதனைக் குக்குடப் புடம் (பத்து வரட்டி) இட நீறிபோகும். அதனை பணவெடை தேனில் உட்கொள்ள சூலை, குன்மம், வாய்வு ஆகியன விரைந்து தீரும்.

## பொரிகார பற்பம்

55. சங்கை சுட்டு நீற்றி பொடியாய் செய்து நீர்விட்டு அரைத்து குகைபோல் செய்து அதனுள் பொரிகாரம் என்னும் வெங்காரத்தை கட்டியாக வைத்து சீலைமண் செய்து பத்துவரட்டியில் புடமிடவும்.

56. பொரிகார பற்பத்துக்கு அனுபானம் கேட்பாயாக. இதனை தேனில் உட்கொள்ள நீர்கடுப்பு உடனே மாறும். நீர் இறங்கும், கல்லடைப்பு தீரும். சதையடைப்பு சீராகி நீர்க்குற்றங்கள் தீரும்.

## சாஸ்திரவேதி பற்பம்

57. சாஸ்திரபேதி பற்பத்தின் செய்முறையை கூறுகிறேன். தாய்ப்பாலும் அதன் சமஅளவுக்கு எருக்கம்பால் சேர்த்து நான்கு சாமம் (12 மணி நேரம்) அரைத்து வில்லைசெய்து அகலிலிட்டு சீலைமண்செய்து பத்து விராட்டியில் புடமிடவும். நன்கு நீறி பற்பமாகும்

Koviloor Digital Library



58. அந்த பற்பத்தை எடுத்து இஞ்சிச் சாற்றில் உட்கொள்ள சுரம் தீரும். பாலில் உட்கொள்ள சுரமும் உஷ்ணமும் தீரும்.

## வெண்குந்திரிக்கப் பற்பம்

59. வெள்ளை குந்திரிக்கப் பற்பத்தை கூறுகிறேன் கேட்பாயாக. பன்றியின் பால்விட்டு அரைத்து வில்லைசெய்து அகலில்வைத்து மேலகல் கொண்டுமூடி சீலைமண்செய்து பத்து வரட்டியில் புடமிடவும்.

60. பத்து வரட்டியில் புடமிட கூகைமாவு போல பற்பமாகும். அந்த பற்பத்தை வெண்ணெயில் உண்டுவர பல்கடுப்பு, பல் இரத்தம் வீழ்தல் ஆகியன தீரும். புண்கள் ஆறும்.

61. பல்நோய்கள், அனைத்து வகையான புண்கள், சூட்டினால் வரும் புண்கள், சூலையினால் ஏற்படும் இரணங்கள் தீரும். பற்கள் எல்லாம் இறுகி உறுதியாகும். வெண்குந்திரிக்கப் பற்பம் அந்த அளவு சிறப்பானது.

## பவழ பற்பம்

62. பவழபற்பம் செய்கின்ற முறையைக் கேட்பாயாக. முயல் இரத்தம் விட்டு பவழத்தை நன்கு ஆட்டி வில்லைசெய்து அகலில் வைத்து மூடி சீலைமண் செய்து பத்து வரட்டியில் புடமிடவும். பற்பமாகும்.

63. வெள்ளையான பற்பத்தை பணவெடை அனுபானத்தில் தர நோய்கள் தீரும். தேனில் குழைத்து சாப்பிட்டு தூதுவளை குடிநீர் அருந்த சயம், கபம் தீரும்.

64. இருமல், காசம், ஆகியன இந்த பவழபற்பத்தினால் தீரும். புனிதமான இந்த பவழ பற்பத்தினை உலகில் எவரும் எளிதில் செய்யமாட்டார்கள். நிகண்டுபோல இந்தநூலை நுணுக்கமாக கூறுகிறேன்.

65. நுணுக்கமாக பவழபற்பம் செய்முறையை கூறினேன். இவ்வுலகில் இத்தகைய் செய்முறையை யாரும் கண்டிருக்கமாட்டார்கள். சூட்சுமமாய் கூறினேன். வெளியில் சுற்றித் திரியாமல் கோடிவித்தை ஆடலாம். இந்த நூலைப்போல் மகத்துவம் மிக்க நூல் எதுவுமில்லை.

Koviloor Digital Library



## வைரபற்பம்

66. வைரபற்பம் செய்முறையைக் கூறக் கேட்பாயாக. பெண்களின் சுரோணிதத்தை விட்டு (இது ஆய்வுக்கு உரியது) அரைத்து வில்லை தட்டி உலர்த்தி அகலில் வைத்துமூடி சீலைமண் செய்து கஜபுடம் (1000 வரட்டி) இட நீறிப்போகும்.

67. வைரபற்பத்தை தேனில் உட்கொள்ள உடல் வைரம்போல் உறுதியாக இருக்கும். மேனியெங்கும் வச்சிரம் போல் இறுகி காணப்படும். இனி நவரத்தினங்களை எல்லாம் பற்பம் செய்யும் முறையை கேட்பாயாக.

## இரத்தின பற்பம்

68. பவழபுத்தை நன்கு கெட்டியாக அரைத்துக்கொண்டு குகையாக செய்து, அதனுள் வைரம் வைத்து குகைக்கு சில்லுபோட்டு சீலைமண்செய்து, பத்து வரட்டியில் புடமிட பற்பமாகும்.

69. இரத்தினங்கள் நீறிற்றானால் இப்புவியில் அதிகம் நினைத்துப்பார்க்க முடியாத சித்துக்கள் விளையாடலாம். அதனாலேயே சித்தர்கள் அதனைச் செய்தார்கள். இந்நூலில் அதனை நாட்டில் உள்ளோர்க்கு எளிதில் புரியும்படி கூறினோம். அனுபானங்கள் அறிந்து கொடுக்கவும்.

## பாஷாண பற்பம்

70. இரத்தின பற்பத்தினால் வியாதிகள் எல்லாம் ஒழிந்திடும். இனி பாஷாண பற்பத்தின் செய்முறையை கேட்பாயாக. முட்டை ஓட்டை சுண்ணமாக செய்துகொண்டு அதனை குகையாக செய்து கொள்ளவும்.

71. அந்தக் குகைக்குள் பாஷாணக்கட்டியை வைத்து வெள்ளெருக்கம் பாலை விட்டு சில்லுகொண்டு மூடி சீலைசெய்து பத்துவரட்டியில் புடமிட குற்றமில்லாத பற்பம் ஆகும்.

72. பற்பம் வந்த எடைக்கு பாதரசத்தை சேர்த்து தாய்ப்பால்விட்டு அரைத்து வில்லைசெய்து உலர்த்தவும் பிறகு அகலில்வைத்து மூடி சீலைமண் செய்து கற்பகக் களிறாகிய ஈஸ்வரியை போற்றி பத்து வரட்டியில் புடமிடவும். பற்பமாகும்.

Koviloor Digital Library



73. இந்த பற்பத்தை எடுத்து வெள்ளீயம் உருகும்பொழுது பணவெடை வீதம் உள்ளுக்கு தர தன்னுள் உறிஞ்சிக் கொள்ளும். அது அதிக விலைக்கு போகும் வெள்ளியாகும்.

74. சுர நோய்களுக்கு இப்பாஷாண பற்பத்தை பாலில் உட்கொள்ள ஒரு நாழிகைக்குள் குளிர்சுரம் ஓடிப்போகும். இந்த பற்ப செய்மறையை எளிதில் யாருக்கும் சொல்லிவிடக் கூடாது. இந்த நூலை பத்திரப்படுத்தி வைப்பாயாக.

## சாரநீறு

75. சார பற்பத்தின் செய்முறையை கேட்பாயாக. புளியம்புரணி சுட்டசாம்பலை தண்ணீரில் கரைத்து தெளிவெடுத்து காய்ச்சி உப்பு எடுக்கவும். இந்த உப்பை குப்பைமேனி சாறுவிட்டு அரைத்து குகை ஒன்றை செய்யவேண்டும்.

76. மூடியும் அந்த உப்பைக்கொண்டே செய்து கொள்ளவும். அதனுள் சாரக்கட்டியை வைத்து சீலைமண் செய்து பத்துவரட்டியில் புடமிடவும் உலகத்திலே இவ்வகையான சார பற்பம் கிடைக்காது. வகாரவித்தை செய்யும் ரசவாதியே வகையுடன் பற்பம் செய்வாயாக.

77. வாய்பேசினால் அதாவது வீண்பேச்சு பேசினால் சாரபற்பம் செய்யமுடியுமா? நோய்களைத் தீர்க்கும் வைத்தியனான இரசவாதியே! சாரத்தின் நுணுக்கத்தினைக் கேட்பாயாக. சாரத்தினால் நாகம் மடிந்து இறக்கும். துத்தநாகத்தை மடித்து மேலும் வகார வித்தையை செய்வாயாக.

78. உலகில் உள்ள நோய்கள் தீர சாரபற்பத்தை தேனில் கொடுக்கவும். மகோதரங்கள், வாயுவின் திரட்சி, நீராம்பல், வீக்கம், க்ஷயம், கர்ப்பரோகம், குன்மம் எல்லாம் தீரும்.

## உப்புபற்பம்

79. உப்புபற்பம் செய்முறையைக் கேட்பாயாக. உப்பை ஒரு கட்டியாக எடுத்துக்கொள்ளவும். வன்னிமரப்பட்டையை எடுத்து இடித்து மாவுபோல் தூளாக்கி அகலிலிட்டு உப்பை நடுவில் வைத்து மேலே வன்னிப்பட்டை தூளை இடவும்.

80. பிறகு அகலை மேலகல் கொண்டு மூடி சீலைமண் செய்யவும். அதன்பிறகு பத்துவரட்டியில் புடமிட தூய பற்பமாகும்

Koviloor Digital Library



81. இந்த உப்புபற்பத்தினை உட்கொள்ள திசைவாய்வு, பாரிசவாய்வு, சூலை, துன்பம்தரும் மகோதரங்கள், நீர்தோஷங்கள், ஆகியன மகிழ்ச்சி அளிக்கக்கூடிய விதத்தில் தீர்ந்து போகும்.

82. உறுதியாக கூறும் இச்செய்தியை கேட்பாயாக பல நுட்பங்களை உடையது இந்த அதிசய உப்புபற்பம். தென்திசை முழுவதும் வாழ இந்த உப்பு பற்பம் செய்யும் முறையைக் கூறினேன். வெள்ளியைச் செம்பாக்கி அதில் ஒரு கழஞ்சுக்கு (5 கிராம்) ஒரு மா (20ல் ஒரு பங்கு) வீதம், செம்பு உருகும்போது உள்ளே கொடுக்கவும்.

83. வெள்ளிச்செம்பில் முன்பு கூறிய அளவில் உப்பு பற்பத்தை சேர்க்க ஐந்து மாற்று தங்கம் ஆகும். அதை முறைப்படி புடமிட தூய தங்கமாகும். கெட்டகுணம் உள்ளவர்க்கு இந்த நூலைக் காட்டாமல் பெரியவர்களுக்கு கொடுத்தால் அறம் அதிகமாக வந்து சேரும்.

## ஆமையோட்டுப் பற்பம்

84. ஆமையோட்டு பற்பம் செய்முறையைக் கேட்பாயாக. மண்புழுக்களை பாலில் இட்டு சுத்தி செய்த பின்பு நன்கு அரைத்து ஆமையோட்டுக்கு கவசம் செய்யவும் உலர்த்தி சீலைமண்செய்து பத்து வரட்டியில் புடமிடவும். வெள்ளையான பற்பமாகும்.

85. வெள்ளை நிறமான நீண்டநாள் ஆயுளையுடைய ஆமையின் ஓட்டு பற்பத்தை தேனில் கொடுத்தால் கண்நோய்கள் தொண்ணுற்றாறும் தீரும். முயலகன் நோய் என்ற வலிப்பு நோய் தீரும். இந்த பற்பம் உலகில் சிறந்த பற்பம் ஆகும்.

## முத்து நீறு

86. உலகில் உள்ளவர்களுக்கு முத்துபற்பம் செய்முறையைக் கூறுகிறேன் கேட்பீராக. சுத்திசெய்த முத்தினை கோழிமுட்டை வெண்கருவினால் அரைத்து வில்லைசெய்து அகலில்வைத்து மூடி சீலைமண் செய்து பத்துவரட்டியில் புடமிடவும். சுண்ணமாகும்.

87. சுண்ணமாகிய முத்து நீற்றை வெற்றிலையில் தடவி தாம்பூலமாக சாப்பிட்டுவர பல் இறுகும். உடலில் உள்ள கபநோய்கள் அனைத்தும் தீரும்.

Koviloor Digital Library



## கற்பூரநீறு

88. முத்து பற்பத்தினால் பிரமேகங்கள், நீரிழிவு ஆகியன தீரும். கற்பூரத்தை நீற்றி சுண்ணமாக்கும் முறையை கேட்பாயாக. கற்பூரத்திற்கு கற்பூரவள்ளிச் சாறு விட்டு அரைத்து வில்லை தட்டவும். பிறகு வெயிலில் காயவைத்து உலர்த்தவும்.

89. பிறகு அகலில் வைத்து மேலகல்கொண்டு மூடி சீலைசெய்து பத்து வரட்டியில் புடமிடவும். நல்ல சுண்ணமாகும். இச்சுண்ணத்தை வெற்றிலை உடன் சேர்த்து சாப்பிட்டுவர உடல் வச்சிரகாயமாகும்.

90. உடல் வலுத்துப்போகும். உடலில் உள்ள குற்றங்கள் எல்லாம் தீரும். வாயினில் உண்டாகும் ரோகங்கள் தீரும். கபரோகம் தீரும். வாய்வு தீரும். மலசல கட்டு நீங்கும். கண்பார்வை தெளிவு பெறும்.

## துருசு பற்பம்

91. உறுதியாக நீலமான துருசினை நீற்ற வழிமுறையைக் கூறுகிறேன். கருவங்கத்துக்கு சமஎடை பாதரசத்தைச் சேர்த்து அந்த எடைக்கு சமனாக வெடியுப்பு கூட்டி வெடியுப்பு திராவகத்தாலே அரைக்கவும். நன்கு வெயிலில் உலர்த்தவும்.

92. வில்லையை அகலில்வைத்து அகல் கொண்டு மூடி சீலைமண் செய்து குக்கிடபுடமிட (10 வரட்டி) சுண்ணமாகும். மஞ்சளுக்கு சிவக்குமானால் மீண்டும் வெடியுப்பை சேர்த்து அரைத்து முன்போல் முறைப்படி அகலிலிட்டு சீலைமண் செய்து புடமிட சுண்ணமாகும்.

93. சுண்ணத்தை மீண்டும் வெடியுப்பு திராவகத்தாலே நன்கு அரைத்துக்கொள்ளவும். அதனை துரிசுக்கட்டிக்கு பூசி வெயிலில் போடவும். மூன்று நாட்கள் பின்பு நன்கு வெளுத்துப் போகும். அதற்கு சீலைமண் செய்து காடைபுடம் (2 வரட்டி) இடவும்.

94. புட்டமிட்டதை எடுத்துப்பார்க்க நன்கு சுண்ணமாகி இருக்கும். இதனை முறைப்படி செய்தவர்களுக்கு துன்பங்கள் அனைத்தும் தீர்ந்துபோகும். இதனை பாத இரசத்திற்கு கால்பணவெடை சேர்த்து மீண்டும் வெடியுப்பு திராவகத்தாலே அரைக்கவும்.

95. வெடியுப்பு திராவகத்தால் மத்தித்து உருட்டி உமிக்கரியில் ஓட்டினைவைத்து அதில் போட்டு உருக்கவும் மணியாகும். ஈஸ்வரியின் பாதத்தினைப் போற்றி வணங்கி எடுத்துப்

Koviloor Digital Library



பத்திரப்படுத்தவும். இதனைக் கொண்டு கோடிவித்தை செய்யலாம்.

96. கோடிவித்தைகளும் இந்த துருசு பற்பத்தில் செய்யலாம். மதி மயங்கவேண்டாம். துருசு சுண்ணத்தை பத்திரமாக வைத்திடு. தெருவில் எளிதில் கிடைக்குமோ. இந்த முறை தேடினாலும் கிடைக்காது. பல நூல்களை பார்த்தாலும் அதிலுள்ள பாடல்களை படித்தாலும் பயன் என்ன? இந்த முறை எளிதில் கிட்டாது.

97. இந்த முறை கிடைக்காமல் போனதற்கு காரணம் கிடைத்தவர்கள் எளிதில் கொடுக்காமலிருப்பதுதான். கொடுத்தார்கள் எனில் காலில் விழுந்து வணங்கி இந்த முறையைப் போற்று. இதனால் அதிக பொருள் ஈட்டலாம். முட்டாளைப்போல் இருக்காமல் முறையாக இந்த துருசு குருவை செய்வாயாக.

## பொன்னிமிளை பற்பம்

98. பொன்னிமிளை பற்பத்தை செய்யும் முறைஙயக் கூறுகிறேன் கேட்பாயாக. அரசம்பட்டையை தூளாக இடித்துக் கொண்டு அகலிலிட்டு நடுவில் பொன்நிமிளையை வைத்து மேலும் அரசம்பட்டையைப் போட்டு மேலகல் கொண்டு மூடி சீலைமண் செய்து கொள்ளவும்.

99. சீலைமண்செய்த அகலை கஜபுடத்தில் புடமிட வெண்மையாகி நீறிப்போகும். பொன்னிமிளை பற்பத்தில் வாயுரோகம், குன்மரோகம் தீரும்.

100. சூலைக்கட்டு, கண்டவிப்புருதி, கண்டமாலை, அரையாப்பு, புற்றுநோய்கள் ஆகியன நெய், தேனில் உட்கொள்ள தீரும். தங்கபற்பம் செய்முறையை கூறுகிறேன் கேட்பாயாக.

## தங்கநீறு

101. நத்தைசூரி விதையை உமிழ்நீரால் அரைத்து தங்கக்காசுமேலே பூசி அகலில் வைத்து மூடி சீலை மண் செய்து ஆயிரம்வரட்டியில் புடமிட தங்கம் நீறிப்போகும்.

102. இந்த தங்கபற்பத்தின் பயனைக் கேட்பாயாக. துஷ்டர்கள் அதிகம் உள்ள இந்த உலகில் தங்கபற்பம் செய்து அதிக பொருளை ஈட்டுவாயாக. வெள்ளிச் செம்பில் இந்த தங்கபற்பத்தை இருபதுக்கு ஒரு பங்கு தர ஐந்து மாற்றுக்கு அதிகமான தங்கம்

Koviloor Digital Library



கிடைக்கும். தங்கம் செய்கின்ற இவ்வித்தை ஈஸ்வரி கூறியது. பெரியோர்கள் அனுதினமும் செய்கிற வித்தையாகும்.

103. இந்த பூரணம் இருநூற்றினுள் அநேக வித்தைகள் உள்ளன. எளிதில் வெல்வது உறுதி, இதை விடுத்து சுற்றி வளைத்து செய்யும் வித்தைகளை விட்டுவிட்டு எளிதான வித்தையை கற்றுத் தேறுவாயாக. இதுவரை நூறு பாடல்களைக் கூறியுள்ளேன். இனியுள்ள நூறு பாடல்களில் முத்துபோன்ற மூலிகைகளின் செய்முறையைக் கூறுகிறேன் கேட்பாயாக.

104. ஒரே மூலிகையினால் செய்யக்கூடிய எண்ணெய்கள், நெய், குடிநீர், தைலங்கள், சூரணங்கள் ஆகியவற்றை பறையடித்து அறிவித்ததுபோல் கூறிவிட்டேன். பல நூல்களில் உள்ளதை ஆராய்ந்து தெளிந்து கூறுகிறேன். இனி வரும் நூறு பாடல்களில் உள்ள மருந்துபோல் உயர்வானது ஏதுமில்லை. இந்த நூற்றுக்கு நிகரான மருத்துவப் பாடல்கள் இல்லை.

## மேகத்துக்குத் தைலம்

105. தனக்கு நிகரில்லாத மேகத்தினைப் போக்கக்கூடிய தைலத்தைக் கேட்பாயாக. சந்தனம், விலாமிச்சு, ஆவிரைப்பட்டை (ஆவாரம்பட்டை) வகைக்கு பத்துபலம் எடுத்துக்கொள்ளவும். ஒரு தூணி நீரில் (21.5 லிட்டர்) போட்டு எட்டில் ஒன்றாகக் காய்ச்சி, நல்லெண்ணெய் ஒரு நாழி (1.3 லிட்டர்) விட்டு அத்துடன் நரிகிண்டி வேர் ஒரு பலத்தை அரைத்து கலக்கவும். (கண் புகைச்சலை தீர்க்கும் மருந்து)

106. கலக்கியபின் மெழுகுபதமாகக் காய்ச்சி வடிக்கவும். இந்த எண்ணெயினை தலைக்குத் தேய்த்து முழுகிவர திரேகம் இறுகும். மேகநோய் தீரும். மேகநோய் தீர முன்பு கூறிய பற்பத்தினையும் சேர்த்து சாப்பிட்டுவர நிச்சயம் பலனளிக்கும்.

## வில்வவேர் தைலம்

107. வில்வ தைலத்தினைக் கேளு. வில்வவேர் பத்து பலம் (350 கிராம்) எடுத்து பதக்கு நீரில் (10.7 லிட்டர்) போட்டு பதமாக எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சவும். காய்ச்சி வடிகட்டி அத்துடன் நல்லெண்ணெய் ஒரு நாழி (1.3 லிட்டர்) சேர்த்து மேலும் ஒரு பலம் சந்தனத்தை அரைத்து விழுதாக்கி மேற்படி கலவையில்

Koviloor Digital Library



கலந்து எரிக்கவும். மெழுகுபதத்தில் தைலத்தை வடித்து தலைக்கு தேய்த்து மூழ்கிவரவும்.

108. இத்தைலத்தை தலைக்கு தேய்த்து மூழ்கிவர பித்தம், உடலிலுள்ள உஷ்ணம், இளமையை போக்கும் மேகம், இருமல், பித்தநோய்கள், உட்சுரங்கள், தீரும், கண்கள் இரண்டும் தெளிவாக தெரியும் அளவிற்கு கண்ணோய்கள் விலகும். இத்தகைய சிறப்புகள் உடைய தைலத்தை கூறியுள்ளேன். அதனைச்செய்து உலகில் உள்ளோர்க்கு வைத்தியம் செய்.

## வேங்கைத் தைலம்

109. உலகிலுள்ள மானிடர்கள் பிழைக்க வேங்கைத் தைலத்தைக் கூறுகிறேன் கேட்பாயாக. வேங்கைக் கட்டை பத்து பலம் (350 கிராம்) எடுத்து அதில் ஒரு தூணி நீர்விட்டு எட்டுக்கு ஒன்றாக காய்ச்சி வடிகட்டவும். குடிநீரை வடிகட்டியபின். அதில் விலாமிச்சம்வேர் ஒரு பலத்தை (35 கிராம்) அந்த குடிநீரைவிட்டே அரைத்து கலக்கி வைத்துக் கொள்ளவும். அதில் குடிநீருக்கு சமஅளவு எண்ணெய் சேர்த்து மெழுகுபதத்தில் காய்ச்சி வடிக்கவும்.

110. இத்தைலத்தை தேய்த்து மூழ்கிவர, வாதநோய்கள், சூலை, பித்த நோய்கள், பீனிசம், தலைவலி, பிரட்டல், வாந்தி, விக்கல் முதலியன தீரும். உடல் ஒளி கூடும், கண் நோய்கள் தீரும். முன்பு சொன்ன நூறு பாடல்களில் ப்பமுறைகள் கூறினேன். பின்னுள்ள நூறு பாடல்களில் எண்ணெய் வகைகளைக் கூறுகிறேன்.

## வெட்டிவேர் தைலம்

111. வெட்டிவேர் பத்து பலம் 350 கிராம் எடுத்து ஒரு பதக்கு நீரில் (10.7 லிட்டர்) போட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி வடிக்கவும். பிறகு அதில் அதிமதுரம் ஒரு பலத்தை எடுத்து நன்கு அரைத்து கலக்கவும். அத்துடன் ஒரு நாழி நல்லெண்ணெய் சேர்த்து மெழுகுபதத்தில் காய்ச்சி வடிக்கவும்.

112. இத்தைலத்தை தலைக்கு தேய்த்து முழுகிவர இவ்வுலகில் மனிதர்களுக்கு உண்டாகும் மண்டைசூலை, குட்டம், நீர்கோர்வை, பார்வை மங்கும் தன்மையுடையுதண் புகைச்சல், காது மந்தம், இளைப்பு, உளமாந்தை, மேல்நோக்கும் வாயு, சயம், தாதுகெடல், உட்ல் எரிதில், காந்தல் ஆகியன தீரும்.

Koviloor Digital Library



இத்தைலத்தை ஒருநாள் விட்டு ஒருநாள் ஒரு மண்டலம் மூழ்கிவர பலன் கிடைக்கும்.

## வேப்பம்பட்டை தைலம்

*113.* வேப்பம்பட்டை எடுத்து கால் துலாம் அளவிற்கு (875 கிராம்) எடுத்து ஒரு தூணி நீரில் போட்டு எட்டில் ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும். அதில் நல்லெண்ணெய் இரண்டு நாழி (2.6 லிட்டர்) விடவும். பிறகு ஏலக்காய் இரண்டு பலத்தை வேப்பம்பட்டை குடிநீர்விட்டு அரைத்து அதில் சேர்க்கவும்.

*114.* பிறகு அதனை அடுப்பிலேற்றி மெழுகு பதமாகக் காய்ச்சி வடிக்கவும். இத்தைலத்தை தலைக்குத் தேய்த்து முழுகிவர வாதநோய்கள், சூலை, குஷ்டரோகம், நீரிழிவு, மேல்கடுப்பு, செங்கரப்பான், புண்கள், புரையோடிய இரணங்கள் ஆகியவை தீரும். இந்த தைலம் அத்துணை மகத்தானது.

## குறுந்தொட்டி தைலம்

*115.* குறுந்தொட்டி வேரை கால்துலாம் (875 கிராம்) எடுத்து நன்கு இடித்து ஒரு தூணிநீரில் போட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும். அதில் கசகசா இரண்டு பலம் அரைத்து கலக்கவும். பிறகு நல்லெண்ணெய் இரண்டு நாழி (2.6 லிட்டர்) விட்டு கலக்கி மெழுகு பதத்தில் காய்ச்சி வடிக்கவும். இதனை தலைக்குத் தேய்த்து முழுகிவர வாதநோய்கள் எண்பதும் விலகி ஓடும்.

## கொடுவேலி வேர்த்தைலம்

*116.* கொடுவேலி வேர் பத்து பலம் (350 கிராம்) எடுத்து பதக்கு நீரில் (10.7 லிட்டர்) இட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சவும். பிறகு அதனை வடிகட்டி அதில் நல்லெண்ணெய் ஒரு நாழிவிடவும். மேலும் அதில் ஒரு பலம் சீரகத்தை அரைத்து சேர்க்கவும். அத்துடன் புன்னைக்காயவு வெண்ணெய் போட்டு கலக்கி மெழுகுபதத்தில் காய்ச்சி வடிக்கவும்.

*117.* இத்தைலத்தை தலைக்குத் தேய்த்து முழுகிவர வாயு, ஆனந்தவாயு, வாதநோய்கள், சொறி, தினவு, சிரங்கு, குட்டம், அரையாப்பு, கிரந்தி சூலை, புண், புரைகள், பிளவை, வீக்கம் என பல நோய்கள்

Koviloor Digital Library



தீரும். இப்படியான நல்லதொரு தைலத்தை செய்து வைத்தியம் பார்ப்பாயாக.

## சீரகத் தைலம்

118. சீரகம் இரண்டு படி எடுத்து ஒரு பதக்கு (10.7 லிட்டர்) நீரில் போட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி குடிநீராக்கி வடிகட்டி வைத்துக் கொள்ளவும். அதில் எள்ளெண்ணெய் ஒரு படி (1.3 லிட்டர்) சேர்க்கவும். பிறகு கார்போக அரிசி இரண்டு பலத்தை எடுத்து குடிநீர்விட்டே அரைத்து அதில் கலக்கவும். பிறகு அதனை அடுப்பிலேற்றி காய்ச்சி மெழுகுபதத்தில் வடிகட்டிக் கொள்ளவும்.

119. இத்தைலத்தை தலைக்குத் தேய்த்து முழுகிவர எட்டுவகை குன்மங்கள், பத்துவகை வாயுக்கள், குட்டம், தழுதனை, குண்டலம், வாந்தி, பித்தங் கிறுகிறுப்பு, வாயுவினால் உண்டான சோகை, பாண்டு, உஷ்ண ரோகங்களும், கபாலச்சூடு, கபால நீர் ஆகியன தீரும். நோயைத் தீர்க்காத மருந்துமுண்டோ.

120. இவ்வுலகில் முளைத்த மூலிகைகளிலே சிறந்தது சஞ்சீவியாகும். மலைகளிலும், முகடுகளிலும் முளைத்து நிற்கும் அதுபோலவே நாட்டிற்குள்ளும் அநேக மூலிகைகள் காணப்படும். அவற்றின் குணத்தை அறியாமல் சண்டித்தனமாக முரண்டு பிடிக்கும் வைத்தியன் பிழைத்துக்கொள்ளமாட்டான். வயிறு பிழைக்க இந்த இருநூறு பாடல்களிலேயே வழி கூறுகிறேன் அறிந்து கொள்ளட்டும்.

## சூரிவித்து தைலம்

121. சூரி விதை கால் துலாம் (875 கிராம்) எடுத்து பதக்கு நீரில் (10.7 லிட்டர்) இட்டு ஒரு விறகால் சிறு தீயாகி எரித்து எட்டில் ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டவும். அதில் நல்லெண்ணெய் ஒரு நாழி, ஆறுமாத அன்னக்காடி ஒரு நாழி, ஒரு பலம் (35 கி) சுக்கை அரைத்த விழுது ஆகியவற்றை கலக்கவும்.

122. இதனை மெழுகு பதமாக காய்ச்சி வடித்து தலைக்கு தேய்த்து முழுகி வர கிரந்தி, குட்டம், சூலை, குன்மம், கிராணி, உள்மூலம், உடலை வாட்டும் சூடு, மலக்கட்டு ஆகியன தீர்ந்து உடல் நலமாகும். இத்தைலம் சஞ்சீவிக்கு ஒப்பாகும்.

Koviloor Digital Library



## கீழ்க்காய் நெல்லித் தைலம்

*123. கீழ்க்காய் நெல்லி சமூலம் கால்துலாம் எடுத்து ஆற்றுநீர் ஒரு பதக்கு விட்டு எட்டில் ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும். அதில் சர்க்கரை ஒரு பலம் இட்டு பிறகு நல்லெண்ணெய் இரண்டு படி விட்டு மெழுகு பதமாகக் காய்ச்சி வடிகட்டவும். அதனை தலைக்குத் தேய்த்து முழுகி வரவும்.*

*124. இத்தைலத்தை தலைக்கு தேய்த்து முழுகி வருவதால் பித்த நோய்கள் அனைத்தும் தீரும். மேலும் தலைசுழற்றல், வாய்நீரூறல், ரத்தபித்தம், வெறித்த பித்தம், இளைப்பு இரைப்பு, பித்த ரோகம், மஞ்சள் நீர், மூத்திரத்தில் இரத்தம் இறங்குதல், சூடு முதல் பல உஷ்ணங்கள், மேலெரிவு, கைகால், காந்தல் தீரும். வெளுத்த மயிர் கறுப்பாக மாறும்.*

## சங்கம்வேர் தைலம்

*125.126. சங்கம் வேர் கால்துலாம் (875 கிராம்) இடித்து ஒரு தூணி நீரில் (21.5 லிட்டர்) போட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி நல்லெண்ணெய் இரண்டு படி விட்டு (2.6 லிட்டர்) கலக்கவும். அதில் மிளகு ஒரு பலம் அரைத்து சேர்த்து காய்ச்சி மெழுகு பதத்தில் வடிக்கவும். அதனை தலைக்குத் தேய்த்து முழுகி வர குட்டம், சொரி, சிரங்கு, பத்துவகை கிரந்தி, சூலைரோகம், செங்கரப்பான், வண்டுகடி, சிறிய விஷங்கள், குரங்கு போலுள்ள வலி, சயம், குத்திருமல், வாதநீர் ஆகியன தீரும். சிவபெருமான் கூறியதை பார்வதி கேட்டுக்கூறியதை நான் அறிந்து உங்களுக்கு கூறியுள்ளேன்.*

## அமுக்கிராத் தைலம்

*127. அமுக்கிரா வேர் பத்து பலம் (350 கிராம்) எடுத்து அதனை ஒரு பதக்கு நீரில் (10.7 லிட்டர்) போட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி வடிக்கவும். அதில் நல்லெண்ணெய் 1 படி (1.3 லிட்டர்)யும் எலுமிச்சம்பழச்சாறு ஒரு நாழியும் சேர்த்து கலக்கி மெழுகு பதத்தில் காய்ச்சி வடிக்கவும். அதனை தலைக்குத் தேய்த்து முழுகிவர பீனிசங்கள், மண்டையிடி ஆகியன தீரும்.*

Koviloor Digital Library



## இஞ்சித்தைலம்

*128.* பச்சை இஞ்சி கால் துலாம் எடுத்து இடித்து சாறு பிழிந்து கொள்ளவும். அதில் நல்லெண்ணெய் ஒரு படியும் (1.3 லிட்டர்) பசுவின் பால் ஒரு படியும் விட்டு மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். இதனை தலைக்குத் தேய்த்து முழுகிவர தீரும் நோய்களைக் கேட்பாயாக.

*129.* மேற்கூறிய தைலத்தை தலைக்குத் தேய்த்துக் குளித்துவர மண்டையிடி, வாதசூலை, பீனிசங்கள், இளைப்பு, சூலை, வாய்வு, கால்கடுப்பு, நெஞ்செரிவு, உடல் வலி எல்லாம் நீங்கும். குட்ட நோய்கள் எல்லாம் தீரும். இனி செம்முள்ளி எண்ணெய் செய்முறையைக் கேட்பாயாக.

## செம்முள்ளித் தைலம்

*130.* செம்முள்ளி சமூலம் நூறுபலம் (3.5 கிலோ) நன்கு இடித்து தூணி நீரில் போட்டு (21.5 லிட்டர்) எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சவும். அதனை வடித்து அதில் நல்லெண்ணெய் ஒரு நாழிவிட்டு மெழுகு பதத்தில் காய்ச்சி வடிக்கவும். அதனை தலைக்குத் தேய்த்து முழுகிவர தீரும் நோய்களைக் கேட்பாயாக.

*131.* சயரோகம், உளைமாந்தை, மந்தார காசம், வாத நோய்கள், கண்ணில் நீர் வடிதல், புண்கள், புரைகள் அரையாப்பு, கிரந்தி, அண்டவாதம், வீக்கம், விடபாகம் ஆகியன செம்முள்ளித் தைலம் தேய்த்துவர விலகும்.

## சாரணைத் தைலம்

*132.* சாரணை வேர் பத்து பலம் (350 கிராம்) எடுத்து பதக்கு நீரில் (10.7 லிட்டர்) இட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி வடிக்கவும். பிறகு அதில் நல்லெண்ணெய் ஒரு நாழி (1.3 லிட்டர்) சேர்த்து கலக்கி மெழுகு பதத்தில் காய்ச்சி வடிக்கவும். இத்தைலத்தை தலைக்கு தேய்த்து முழுகிவர வாதத்தால் வந்த நோய்கள் அனைத்தும் விலகும்.

## இருவேலித் தைலம்

*133.* இருவேலி (வெட்டிவேர்) நூறு பலம் (3.5 கிலோ) எடுத்து இடித்து ஒருதூணிநீரில் இட்டு (21.5 லிட்டர்) எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி

Koviloor Digital Library



வடிகட்டிக் கொள்ளவும். அதில் நல்லெண்ணெய் ஒரு நாழி (1.3 லிட்டர்) விட்டு மெழுகுபதத்தில் காய்ச்சி வடிக்கவும். இத்தைலத்தை தலைக்குத் தேய்த்து முழுகிவர உட்டிணம், கிறுகிறுப்பு, சிலேத்துமம், பித்தம், கண்புகை ஆகியன மண்டலத்தில் தீரும்.

## அகிற்கட்டைத் தைலம்

134. அகிற்கட்டை ஐம்பது பலம் (1750 கிராம்) எடுத்து ஒரு தூணி நீர் (21.5 லிட்டர்) விட்டு எட்டில் ஒன்றாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். அதில் நல்லெண்ணெய் ஒரு நாழி சேர்த்து மெழுகு பதத்தில் காய்ச்சி வடிகட்டவும். அதனை தலைக்குத் தேய்த்து முழுகிவர நீர்த்தோடங்கள் (பீனிசங்கள்) மேகநோய் உடனே தீரும்.

## அறுகம்வேர்த் தைலம்

135. அறுகம் வேர் நூறுபலம் (3.5 கிலோ) எடுத்து அதில் தண்ணீர் நூறுபடி (130 லிட்டர்) விட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சவும். பிறகு வடிகட்டி அதில் நல்லெண்ணெய் ஒரு நாழி வார்த்து மெழுகு பதமாக காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

136. இத்தைலத்தை தலைக்குத் தேய்த்து முழுகிவர மூலச்சூடு, கபாலசூடு, பித்தநோய்கள், வாதநோய்கள், கிரந்தி, சூலைநீர், வயிறுஎரிவு, நெஞ்சுவலி, நீர்கடுப்பு, உடலில் ஏற்படும் வரட்சி, அதிகப்படும் உடல் சூடு ஆகியன தீரும். உடல் குளிர்ச்சி அடையும்.

## கொடுப்பைத் தைலம்

137. கொடுப்பை என்னும் பொன்னாங்கண்ணி சாறு ஒரு படி (1.3 லிட்டர்) எடுக்கவும். அத்றகு சம அளவு நல்லெண்ணெய் சேர்த்துக்கொள்ளவும். அதில் கோஷ்டம் ஒரு பலத்தை பசும்பால் விட்டு அரைத்து கலக்கிக்கொள்ளவும். இதனை மெழுகு பதத்தில் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும். இதனை ஒரு மண்டலம் தலைக்கு தேய்த்து குளித்துவர தீரும் நோய்களைக் கேட்பாயாக.

138. கொடுப்பைத் தைலத்தை தலைக்குத் தேய்த்து முழுகிவர பித்தநோய்கள், தலைவலி, சன்னி, தாகம், உஷ்ணம், உள்சுரம், உடல் எரிதல், கைகால் காந்தல், கண்ணெரிவு, தலைச்சூடு, உடல்வலி, எரிகுன்மம் ஆகியன தீரும். கண்கள் தெளிவுபெறும்.

Koviloor Digital Library



## கையாந்தகரை தைலம்

139. கரிசாலைச்சாறு ஒரு படி, கற்றாழை சாறு ஒரு படி (1.3 லிட்டர்) நெல்லிக்காய் சாறு ஒரு படி (1.3 லிட்டர்) ஆகிய மூன்றையும் ஒன்றாகச் சேர்த்து அதில் நல்லெண்ணெய் ஒரு படி கலக்கிக் கொள்ளவும். இதில் சாதிக்காய் நான்கு பலம் (140 கிராம்) அரைத்துச் சேர்க்கவும்.

140. இதனை மெழுகு பதமாகக் காய்ச்சி வடிக்கவும். இத்தைலத்தை தலைக்குத் தேய்த்து முழுகிவர கண்ணோய், தலைவலி, காது நோய்கள், பித்தம், உஷ்ணம், பீனிசங்கள் ஆகியன தீரும் என்று முனிவர்கள் உரைத்தவாறு கூறியுள்ளேன்.

## சவரித்தைலம்

141. சவுரிக்கொடியை நூறுபலம் எடுத்து நன்கு இடித்து ஒரு தூணி நீரில் போட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும். அதில், நல்லெண்ணெய் ஒரு நாழியும் (1.3 லிட்டர்) கருஞ்சீரகம் ஒரு பலம் (35 கிராம்) எடுத்து அரைத்த விழுதும் சேர்த்து கலக்கி மெழுகுபதமாகக் காய்ச்சி வடிக்கவும்.

142. இத்தைலத்தை தலைக்குத் தேய்த்து முழுகிவர வாதத்தால் எழுந்த கரப்பான்கள், காய்ப்பு, கழலை, உடலில் உள்ள வீக்கம், அனைத்தும் வாடிப்போகும். நோய்கள் எல்லாம் தீர்ந்துபோக தைலம் ஒன்று கூறுகிறேன் கேட்பாயாக. செந்நாவற்பட்டை தூள் நூறுபலம் எடுக்கவும்.

## செந்நாவற்பட்டைத்தைலம்

143. செந்நாவற்பட்டை தூள் 100 பலத்தை (3.5 கிலோ) ஒரு தூணி (21.5 லிட்டர்) நீரில் போட்டு எட்டுக்கு ஒன்றாக்காய்ச்சி வடி கட்டவும். அதில் வேப்பெண்ணை ஒரு படி, பால் ஒரு நாழி (1.3 லிட்டர்) சேர்க்கவும். பிறகு வசம்பு ஒரு பலம் அரைத்து கலக்கி மெழுகு பதத்தில் காய்ச்சி வடிகட்டவும். இதனை தலைக்குத் தேய்த்து முழுகிவர வாதம், பித்தம் அனைத்தும் தீரும்.

## அகிற்பட்டை தைலம்

144. அகில்பட்டை நூறுபலம் (3.5 கிலோ) எடுத்து நன்கு இடித்து ஒரு தூணி நீரில் (21.5 லிட்டர்) இட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி

Koviloor Digital Library



வடி கட்டவும். அத்துடன் வேப்பெண்ணெய் ஒரு நாழியும் (1.3 லிட்டர்) வெற்றிலைக் கொடிச்சாறு ½ நாழியும் (650 மி. லிட்டர்) சேர்த்து நன்கு காய்ச்சி மெழுகு பதத்தில் வடிகட்டவும்.

## துராப்பாசித் தைலம்

145. மேற்கூறிய அகிற்பட்டை தைலத்தை தலைக்குத் தேய்த்து முழுகிவர வாதநோய்கள் அனைத்தும் தீரும். இன்னொரு தைலவகையை கேட்பாயாக. துராப்பாசி இலை இரண்டு பலத்தை எடுத்து ஒரு தூணி நீரில் (21.5 லிட்டர்) போட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டவும் அத்துடன் விளக்கெண்ணெய் ஒரு நாழியும் (1.3 லிட்டர்) ஒருபலம் மஞ்சளை தூளாக்கிப் போட்டுக் காய்ச்சவும்.

146. இதனை மெழுகுபதத்தில் காய்ச்சி வடிகட்டி உபயோகிக்க வாதநோய்கள் தீரும். தெளிந்த வைத்தியர்களுக்குக் கூட இம்முறை கிடைக்காது. பார்ப்பதற்கு எளிதாக இருக்கும். ஆனால் அதிக நுணுக்கங்கள் உடையது. கதிகெட்ட நோய்கள் தீர இம்முறைகளைப் பாடினேன். வகார வித்தையில் கிடைக்கும் பொருளுக்கு சமமாக இவ்வைத்திய முறைகளில் கிடைக்கும்.

## பொன்னாங்கண்ணி கிருதம்

147. இன்னொரு இனிய செய்தியை கேட்பாயாக. உள்ளுக்கு உண்ணக்கூடிய தைலங்கள், கிருதங்கள் கூறுகிறேன். பொன்னாங்காணிவேர், வெட்டிவேர், விலாமிச்சம் வேர், ஓரிதழ் தாமரை வேர், சிறுகீரைவேர், ஆகியவை வகைக்கு ஒரு பலம் (35 கிராம்) எடுத்து நன்கு பால்விட்டு அரைத்து இரண்டுபடி நெய்க்குள் விட்டு காய்ச்சவும்.

148. நன்கு காய்ச்சி வடிகட்டியபின் ஒரு கரண்டிவீதம் சாப்பிட்டுவர கணரோகங்கள் 18ம் தீரும் உட்சுரங்கள், உஷ்ணங்கள், மேகம், வரட்சி ரோகம். அக்கரம் ஆகியன தீரும்.

## சதாவேரிக் கிருதம்

149. சாதிக்காய், அதிமதுரம், மாசிக்காய் வகைக்கு ஒரு பலம் எடுத்து பாலில் அரைத்து முன்போலவே நெய்யில் சேர்த்துக் கொள்ளவும். அதனை முறைப்படி காய்ச்சி வடிக்கவும். இந்த கிருதத்திற்கும் முன்சொன்ன நோய்கள் தீரும். இன்னுமொரு கிருதம் கூறுகிறேன்.

Koviloor Digital Library



சதாவேரி கிழங்குச் சாறு ஒரு நாழி (1.3 லிட்டர்) எடுத்துக் கொள்ளவும். திரிகடுகு, திரிபலா வகைக்கு ஒரு கழஞ்சு அரைத்து சேர்த்து கலக்கிக்கொள்ளவும். அத்துடன் நெய் சமஅளவு சேர்த்து மெழுகுபதத்தில் காய்ச்சி வடிக்கவும்.

150: கரண்டியளவு இந்த கிருதத்தை உண்டுவர கரப்பான் வகைகள் தீரும். நீர் விஷங்கள், வாய்வு, இரைச்சல், பித்தம் சிலேத்துமம், கிறுகிறுப்பு, செரியாமாந்தம் தீரும், வயிற்றுக் கிருமிகள் விலகி ஓடும். அத்தகைய அற்புதமுடையது.

## திரிகடுகு கிருதம்

151. திரிகடுகு, (சுக்கு, மிளகு, திப்பிலி) திரிபலா (கடுக்காய் தோல், தான்றிக்காய் தோல், நெல்லிவற்றல்) ஆகியன வகைக்கு ஒரு பலம் 35 கிராம் எடுத்து, பத்துபடி நீருக்குள் (13 லிட்டர்) போட்டு, எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சவும். அதற்குச் சம அளவு நெய் சேர்த்துக் காய்ச்சவும். மெழுகு பதத்தில் எடுத்து வடித்துக்கொள்ளவும். இந்த நெய்யை கரண்டி (உச்சிக்கரண்டி) அளவு சாப்பிடத் தீரும் வியாதியை கேட்பாயாக.

152. சீரகத்தையும் ஓமத்தையும் சம அளவு எடுத்து சூரணம் செய்து வெருகடி அளவு எடுத்து மேற்படி நெய்யை கலந்து தேனுடன் சேர்த்துச் சாப்பிட கரப்பான் 16 வகைகள், சிரங்கு, குஷ்டம், கிருமி, அசீரணம், கிரந்தி கிராணி, மூலம் ஆகியன விலகி திரும்பி வராது.

## தூதுவளை கிருதம்

153. தூதுவளை, கண்டங்கத்தரி, துளசி, ஆடாதோடை, விஷ்ணுகிரந்தி, நீர்ப்பிரம்மி ஆகியவை வகைக்கு பத்து பலம் (350 கிராம்) எடுத்து நன்கு இடித்துக்கொள்ளவும். அதனை தூணிநீரில் போட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சவும். பிறகு வடிகட்டி வைத்துக்கொள்ளவும்.

154. வடிகட்டி எடுத்துக்கொண்ட அளவுக்கு சமனாக நல்லெண்ணெயுடன், நெய்யும் கூட்டி கலந்து கொள்ளவும். பிறகு, திப்பிலி, சித்தரத்தை ஆகியவற்றை வகைக்கு அரை பலம் எடுத்து மெழுகுபோல் அரைத்து முன் கூறிய கலவையில் கலந்து கொள்ளவும். இதனை மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்ளவும். இதனை ஒரு உச்சிக்கரண்டி அளவு (15 மி. லிட்டர்)

Koviloor Digital Library



உண்டு வர ஒரு திட்டத்தில் (குறிப்பிட்ட நாளுக்குள்) இருமல் தீரும்.

155. இந்த தூதுவளை நெய்யுடன் தேன் கூட்டி உண்டுவர உட்சுரங்கள், இரைப்பு, இளைப்பு, கக்கல், வாயு, கபக்கட்டு, ஆகியன தீரும். மேலும் இந்த தூதுவளை கிருதத்தை திரிகடுகு, நெல்பொரி, தேன் ஆகியவற்றுடன் கலந்து சாப்பிட்டுவர பல நோய்கள் தீரும்.

## சன்னிக்குத் தைலம்

156. சன்னிநோய்க்கு தைலம் ஒன்று கூறுகிறேன் கேட்பாயாக. பூண்டு, வசம்பு, மண்புழு, முசுறுமுட்டை, வகைக்கு 35 கி, கோழிமுட்டை ஒன்று ஆகியவற்றை எடுத்துக்கொள்ளவும். நெய் ஒரு நாழியும், வேப்பெண்ணெய் ஒரு நாழியும் (1.3 லிட்டர்) சேர்த்து கலந்துகொள்ளவும். சரக்குகளை விளக்கெண்ணெய் ஒரு நாழி (1.3 லிட்டர்) எடுத்து அதில் பொரித்து எல்லாவற்றையும் கலந்து எரிக்கவும்.

157. சுக்கினை இடித்து கிழிபோல கட்டி தைலத்தில் போட்டு ஒற்றடமிட சன்னிவாதம் செய்யும் வலி ஐந்தும் தீரும். மீளாத மீண்டும் மீண்டும் வாதை செய்யும் சன்னிக்கு இத்தைலத்தை உள்ளுக்குத் தரவும்.

## நவச்சாரக் குழம்பு

158. நவச்சாரக் குழம்பு செய்முறையைக்கேட்பாயாக. எருக்கம்பால் ஒரு உழக்கு, கள்ளிப்பால் ஒரு உழக்கு, நவச்சாரம் பத்து கழஞ்சு, சேர்த்து அரைத்து மெழுகாக்கவும். அத்துடன். ஆமணக்கெண்ணெய் சேர்த்து அரைத்து செப்புப் பாத்திரத்தில் அடைத்து வைத்துக் கொள்ளவும். பெருவயிறு, மகோதரங்கள், நீராம்பல் விஷபாகம் ஆகியன தீரும்.

159. இந்த நவச்சாரக் குழம்பினை மிளகு, குன்றிமணி, சுண்டைக்காய் அளவு உள்ளுக்கு தரவும். வயிற்றுக் கிருமிகள், மலபேதங்கள் ஆகியன தீரவேண்டுமானால் இக்குழம்பை வெந்நீரில் உட்கொள்ள வேண்டும். நாகத்தின் விஷம் போன்றவை சூரியனைக் கண்ட பனியைப்போல் விலகும். இந்த மருந்தை உட்கொண்டால் ஏழு நாட்கள் பால் மட்டும் உண்ணவேண்டும்.

Koviloor Digital Library



## மேனிச்-சூரணம்

*160.* குப்பைமேனியை சூரணம்செய்து அதற்கு சம அளவு சீரகத்தூள் சேர்த்து நாற்பது நாள் உண்ண வாய்வு எல்லாம் தீரும். பசிதீபனம் அதிகம் உண்டாகும். மந்தம் தீரும். சில விஷங்கள் தீரும். வேதாக்கினி குமாரன் பொடி என்று இதற்குப் பெயர்.

## சீரகப்பொடி

*161.* பெருமைமிக்க பொடி ஒன்று கூறுகிறேன். கேட்பாயாக. சீரகம், ஒரிதழ்தாமரை, சிவப்பு சந்தனம் ஆகியவை வகைக்கு ஒரு பலம் 35 கிராம் எடுத்து இடித்து தூள் செய்து கொள்ளவும். இச்சூரணத்தை ஒரு கழஞ்சு (5 கிராம்) அளவு நெய்யில் உண்டுவர உஷ்ணங்கள் (உடல்சூடு) தசையில் ஏற்படும் ரோகம், நீர்கடுப்பு பிரமேகங்கள் தீரும்.

*162.* மேலும் இச்சீரகப் பொடியினால் மேகம், உட்காய்ச்சல், எரிவு, காந்தல், குன்மம், எலும்புருக்கி, தசையடைப்பு, நீர்த்தாகம் (அதிதாகம்), மார்பில் ஏற்படும் நோய்கள், வாய்நாற்றம், உடலில் ஏற்படும் கற்றாழை நாற்றம் ஆகியன தீரும். இன்னொரு செய்முறையைக் கூறுகிறேன். கேட்பாயாக, கூகைநீர், கஞ்சா, சாதிக்காய், வாய்விளங்கம், குரோசாணி ஓமம் ஆகியவற்றை எடுத்துக் கொள்ளவும்.

*163.* மேற்கூறிய சரக்குகளை வகைக்கு ஒரு பலமாக எடுத்து வறுத்து சூரணம் செய்து கலந்து கொள்ளவும். இதற்கு சமஅளவு கருவேம்பின் பொடி சேர்க்கவும். இச்சூரணத்தை வாழைப்பூவை பிட்டவியல் செய்து பிழிந்து எடுத்த சாற்றில் உட்கொண்டால் கடுப்பு, இளைப்பு, மூலத்தில் சூடு போகும். (இந்த மருந்து கழிச்சல், கடுப்பு, மூலச்சூடு ஆகியவற்றை குணமாக்குகிறது. மேலும் இதில் சேரும் சரக்குகளும் கழிச்சலை நிறுத்தக்கூடியதாக இருப்பதால் இம்மருந்தில் சேரக்கூடிய கருவேம்பு என்பது கறிவேப்பிலையாக இருக்கவேண்டும்.)

## கொடிவேலி சூரணம்

*164.* கொடிவேலியை சூரணம் செய்த தூள் ஒரு படி (1.3 லிட்டர்) பரங்கிப்பட்டை, குப்பைமேனித்தூள் ஆகியவை மேற்கூறிய அளவாகிய வகைக்கு ஒரு படி, ஆகியவற்றை கலந்து வைத்துக் கொள்ளவும். அதில் கார்போக அரிசி, கருஞ்சீரகம், நற்சீரகம் ஆகிய

Koviloor Digital Library



மூன்றையும் வகைக்கு ஒரு பலம் எடுத்து சூரணம் செய்து கலந்து கொள்ளவும்.

*165.* இந்த சூரணத்தை தேனிற்கொள்ள சூலை, கிரந்தி, குட்டம், வாதவாய்வு, வண்டுகடி, புழுவெட்டு, விஷக்கடி, எலிக்கடி, ஆகியன தீரும். அபானவாய்வு எளிதில் இறங்கும். மூலத்தில் சூடு நீங்கும். மேலும் மிளகு நீர்க்கியாழம் உட்கொள்ள ஒரு மண்டலத்தில் பாண்டு நோய் தீரும்.

## கெர்ப்பமில்லாதவர்களுக்கு

*166.* இன்னுமொரு மருந்தைக் கூறுகிறேன். பிள்ளையில்லாதவர்க்கு மருந்து கேட்பாயாக. பேய்க்கும்மட்டி விதை, சுத்தி செய்த நேர்வாள விதை இவை இரண்டையும் சம அளவு எடுத்து கலந்து குழித்தைலம் வாங்கவும். மஞ்சள் தூள் ஒரு காசும், குழித்தைலம் ஒரு காசு அளவும் சேர்த்து மத்தித்து உண்ணவும்.

*167.* மேற்கண்ட முறைப்படி குழித்தைலத்தை உண்டுவர கெர்ப்பவாயு தீரும். யோசனை செய்ய வேண்டாம். மருந்தை உண்டவுடன் வெந்நீர் பருகவும். அதிகமாக பேதியானால் கஞ்சியை உட்கொள்ளவும். மாதவிலக்கு உண்டான நாள்முதல் காலையில் மட்டும் ஒரு பொழுது மருந்தை உட்கொண்டு வரவும். அற்பம் என்று நினையாமல் இம்மருந்தை உட்கொள்ளவும். பிள்ளையுண்டாகும் இது நிச்சயம்.

## கொம்பரக்கு கிருதம்

*168.* கொம்பரக்கு, குந்திரிக்கம், சாதிக்காய், குரோசாணி ஓமம் ஆகியவற்றை சம அளவு எடுத்து சூரணித்து கல்வத்திலிட்டு நல்லெண்ணெய் விட்டு அரைத்து சிறு புன்னைக்காய் அளவு உண்டுவரவும். இதனால் கிராணிமூலம், குத்துகின்ற குறுக்குவலி (இடுப்பு வலி), மூலச்சூடு, கடல் போல வந்த [illegible]ப்பு, ஆகியவை தீரும்.

## முசுறுமுட்டை தைலம்

*169.* காதடைப்பு, காதுபுண், காதிலுள்ள நோய்கள் எல்லாம் தீர தைலம் ஒன்று கூறுகிறேன் கேட்பாயாக. மண்புழு, முசுறுமுட்டை, நண்டு சதை, வெள்ளைப்பூண்டு, கோழிமுட்டை, வசம்பு, குக்கில் ஆகியவற்றை வகை வகைக்கு கழஞ்சு அளவு (5 கிராம்) சேர்த்து

Koviloor Digital Library



வேப்பெண்ணெயில் போட்டு எரித்து பதமாக வடித்து காதுக்கு உள்ளே சில துளிகள் விடவும்.

170. செவிநோய், தந்த நோய் முதலியவற்றுக்கு மருந்து. இந்த தைலத்தை சில துளிகள் காதில் விட்டு பஞ்சால் அடைத்து வைக்க பத்து நாளில் செவி கேட்கும். சீழ்பாய்ச்சல், குத்து, உளைச்சல், அடைப்பு, காதிரைச்சல் அகன்று போகும். பூச்சிகள் சாகும். இன்னொரு முறையைக் கேட்பாயாக. பாக்கில் முன் தைலத்தைப் பூசி தின்று ஒருபக்கத்தில் பல்வலி உள்ள பக்கத்தில் ஒதுக்கிக் கொள்ள பற்குத்து போகும்.

171. மேலும் முள்பிரண்டை வேர்கியாழத்தில் வாய்கொப்பளிக்க பல்லரணை, தந்தசூலை, பல் அழுக்கு தீரும். பல் அசைவு நின்று பெலத்து நிற்கும். நாக்கில் வரும் சிங்கிரோகம் தீர மருந்து ஒன்று கூறுகிறேன் கேட்பாயாக. சிவனார்வேம்பின் வேரால் பல்விளக்கிவர பத்துநாளில் நோய்கள் தீரும்.

## வெள்வேல்நீர்

172. பல் நோய்கள் அனைத்தும் தீர மருந்து ஒன்று கூறுகிறேன் கேட்பாயாக. வெள்வேல்பட்டை, குமிள். ஓன்னிப்பட்டை, குண்டலம்பாளை, எருக்கிலை, மருக்காரைப்பட்டை, தொழுதோண்டிபூட்டை இவற்றை சம அளவாக எடுத்து ஒரு தூணி நீரில் போட்டு எட்டுக்கு நன்றாகக் காய்ச்சி அதில் எலுமிச்சம் பழச்சாறு ஒரு நாழி (1.3 லிட்டர்) சேர்க்கவும்.

173. அதே அளவுக்கு நல்லெண்ணெய் சேர்க்கவும். பிறகு அதில் துருசு, வெள்ளைக் குந்திரிக்கம் வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் பொடித்து காய்ச்சி வடிக்கவும். பிறகு அதில் கோழி இரத்தம் விட்டு கொப்பளிக்க தொண்டை கட்டு முதல் பல்லில் ஏற்படும் புண்கள் வரையும், மற்றும் வீக்கம் எல்லாம் தீரும்.

## பாகலிலைத் தைலம்

174. பாகலிலைச் சாறு, கொம்மட்டிசாறு, வேப்பிலைச்சாறு, எருக்கிலைச் சாறு, விழுதியிலைச்சாறு, வகைக்கு ஒருநாழி எடுத்து கலந்து கொள்ளவும். பிறகு அதில் வேப்பெண்ணெய், ஆமணக்கெண்ணெய் ஆகியவை வகைக்கு ஒரு நாழிவிட்டு காய்ச்சி பதத்தில் வடித்து வைத்துக் கொள்ளவும். அந்த எண்ணெயில் காசெடை உள்ளுக்கு தரவும்.

Koviloor Digital Library



175. பாகலிலைத் தைலம் காசெடை உள்ளுக்கு சாப்பிட்டு வர நீர்க்கட்டு, மலக்கட்டு, கிருமி, வயிற்றுப் புழுக்கள் தீரும். வாய்வு நீங்கும், கெர்ப்பம் உண்டாகமலிருக்க காரணமான மலட்டு புழு தீரும். வாதத்துடன், மலக்கட்டு, வாயு ஆகியவை ஒருங்கே தீரும். உலகத்திலே சுருக்கான மருந்து இதுதான் என்று உணர்ந்து செய்வாயாக.

## மருதோன்றிக்கியாழம்

176. மருதோன்றி வேர் மற்றும் சீரகம் ஆகியவை வகைக்கு கால்பலம் (9 கிராம்) சேர்த்து இரண்டு நாழி நீரிலிட்டு (1-3 லிட்டர்) உழக்கு அளவாக குறுகக் காய்ச்சி இருவேளை வீதம் மூன்று நாள் குடித்துவர முறைச்சுரம், விஷசுரம், மூலவாய்வு, பித்தம், மாந்தம் ஆகியன தீரும்.

## வெட்பாலைக்கியாழம்

177. வெட்பாலை, சீரகம் வகைக்கு கால்பலம் எடுத்து இரண்டு நாழி நீர்விட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டி குடித்துவர வாய்வு, குன்ம நோய்கள் அனைத்தும் தீரும்.

## வில்வவேர்கியாழம்

178. நெல்பொரியும், வில்வவேரும் வகைக்கு கால்பலம் எடுத்து இரண்டு நாழி நீர்விட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டிக் குடிக்க வாந்தி, விக்கல் தீரும். இன்னுமொரு குடிநீர் கூறுகிறேன். முன்னை வேர், வில்வவேர், சுக்கு வகைக்கு கால்பலம் எடுத்து இருநாழி நீர் விடவும்.

## முத்தக்காசு கியாழம்

179. அதனை எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டிக் குடிக்க, விக்கல், வாந்தி, பித்தம், அழல், தாகம் முறைச்சுரம் ஆகியன தீரும். இன்னமொரு குடிநீர் வகையைக் கேட்பாயாக. முத்தக்காசு, விஷ்ணுகிரந்தி வகைக்கு கால்பலம் எடுத்து இடித்து இரண்டு நாழி நீர்விட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சவும்.

## திரிபலாதி கியாழம்

180. அக்குடிநீரை மூன்றுநாள் ஆறுவேளை குடிக்க சயம், ஈளை, இளைப்பு, அதிக மூச்சு தீரும். இக்குடிநீருடன் மிளகு கூட்டி

Koviloor Digital Library



கியாழத்தை தேனில் உட்கொள்ளவும். இன்னொரு வகை குடிநீரைக் கூறுகிறேன். நெல்லிக்காய், தான்றிக்காய், கடுக்காய் தோல் ஆகிய மூன்றையும் வகைக்கு கால்பலம் எடுத்து அத்துடன் மிளகு ஒரு கழஞ்சு (5 கிராம்) கூட்டிக் கொள்ளவும்.

181. அத்துடன் இரண்டு நாழி நீர்விட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி தேன் கலந்து அத்துடன் திரிகடுகு தூள் விட்டு குடிக்க சிலேற்பனங்கள், கபம், ஈளை, இளைப்பு, காய்ச்சல் நீங்கும். சயம் அனைத்தும் தீரும். இன்னும் பல குடிநீர் வகைகளை உலகத்தோர் பிழைக்கக் கூறுகிறேன் கேட்பாயாக.

## சந்தனக் கியாழம்

182. சந்தனம், விலாமிச்சம்வேர், வெட்பாலை, முத்தக்காசு, சுக்கு ஆகியவை வகைக்கு கால்பலம் (9 கிராம்) எடுத்து இரண்டு நாழி நீர்விட்டு எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டி சீனி கூட்டி பத்து நாள் சாப்பிட்டு வரவும். சுரம், வாய்வு, சலதோடம், சிரசிலுள்ள பித்தநீர், கபவாதம்.

183. தாகம், நீர்க்கடுப்பு, மஞ்சளாக ஊற்றும் பித்தம், காமாலை ஆகியன தீரும்.வேறு ஒரு குடிநீர் முறையைக் கூறுகிறேன் கேட்பாயாக. வேப்பம்பட்டை, மிளகு, சுக்கு வகைக்கு கால்பலம் சேர்த்து இரண்டு நாழிவிட்டு எட்டுக்கு ஒன்றாக காய்ச்சி வடிகட்டி உட்கொண்டுவர புழுக்கிருமி மந்தம், வாய்வு எல்லாம் தீரும்.

## இருவேலிக் கியாழம்

184. இருவேலி (வெட்டி வேர்), அதிமதுரம், இஞ்சி ஆகிய மூன்றையும் வகைக்கு கால்பலம் (8¼ கிராம்) எடுத்து இரண்டு நாழி நீர்விட்டு எட்டுக்கு ஒன்றாக காய்ச்சி வடிக்கவும். இதனை காலை மாலை பத்து நாள் சாப்பிட்டுவர வாய்வு, பித்தம், சோகை, பரண்டு தீரும். அரோசிகம் என்றும் பசியில்லாமை வராது.

## சிலேற்பன நோய்களுக்கு பிட்டவியல்

185. பேய்ப்புடல், பற்படாகம், துளசி, தூதுளை, ஆடாதோடை, கண்டங்கத்தரி, இசங்கு வகைக்கு ஒரு கைப்பிடி எடுத்துக்கொள்ளவும். சுக்கு, மிளகு திப்பிலி வகைக்கு ஒரு கழஞ்சு நிறுத்து எடுத்துக் கொள்ளவும். பிறகு பொடி செய்து கொள்ளவும்.

Koviloor Digital Library



186. மேற்கூறியவற்றை பிட்டவியல் செய்து பிழிந்து தேன் கலந்து உட்கொள்ள கபநோய்கள், இருமல், உள்சுரங்கள், வாதவாய்வு கபநோய்கள், இருமல், உள்சுரங்கள், வாதவாய்வு ஆகியன தீரும். இன்னொருவகை இலைநீர் கூறுகிறேன் கேட்பாயாக. முசுமுசுக்கை, விஷ்ணு கிரந்தி, நிலவேம்பு, சங்கன்குப்பி,

187. ஆகிய மூலிகைகளை வகைக்கு ஒரு கைப்பிடி எடுத்து குறுக அரிந்து சட்டியில் இட்டு விட்டவியல் செய்து சாறு பிழிந்துகொள்ளவும். அதில் சுக்கு, சீரகம் ஆகிய இரண்டையும் இடித்து சூரணம் செய்து மேல்பொடியாக தூவி தேன் கலந்து உண்ண உஷ்ணம், வாதசுரம் ஆகியன தீரும்.

## அவி நீர்

188. இன்னுமொரு செய்தி கூறுகிறேன் கேட்பாயாக. நிலவேர், இஞ்சி, பூண்டு, முடக்கத்தான், வேம்புமொக்கு, நொச்சியிலை வகைக்கு ஒரு கழஞ்சு எடுத்து இடித்து, பிட்டவியல் செய்து, பிழிந்து தேன்கூட்டி உண்டுவர சுரம், சன்னி, சிலேத்துமம் வாதம் தீரும்.

189. மேலும் வாத முதல் சன்னிவகையெல்லாம் தீர்ந்து போகும். வஞ்சகம் இல்லாமல் மருந்து செய்முறைகளைக் கூறினேன். இதனை உண்மை என நம்பி வைத்தியம் செய்பவன் பிழைத்துக் கொள்வான். பொய்யென்று கூறுபவன் பாவியாவான். வித்தைகளில் சிறந்தது ஏகவித்தை என்னும் ஒரு சரக்கை வைத்து வைத்தியம் பார்ப்பது. அதனை கருத்தில் கொண்டு விரும்பிச் செய்தால் ஈஸ்வரன் போல் இருக்கலாம்.

## சிவனார்வேம்பு தைலம்

190. இன்னொரு செய்தி கூறுகிறேன் கேட்பாயாக. சிவனார் வேம்பை குழித்தைலம் வாங்கி அதில் சிவனார் வேம்பு மூலிகையின் சூரணத்தை குழைத்து உண்டுவர மேனி முருக்கம்பூ போல சிவக்கும். வெட்டுபட்ட புண்களை ஆற்றும். கால்வெடிப்பு, குட்டம், சூலை, கடிவிஷம் ஆகியன தீரும்.

## வீழிவேர் தைலம்

191. வீழிவேரை குழித்தைலம் வாங்கி அதில் வீழி சமூலத்தை சூரணம் செய்து குழைத்து உண்டு வரவும். ஒரு மண்டலத்தில் குட்டம்

Koviloor Digital Library



எல்லாம் ஒழிந்து போகும். உடலில் தோன்றும் வெண்குட்டம் ஓடிப்போகும்.

## சேங்கொட்டைத் தைலம்

192. சேங்கொட்டையை குழித்தைலம் வாங்கி அதில் சேங்கொட்டையின் பஞ்சாங்கத்தையும் சூரணம் செய்து குழைத்து உண்டுவர நரைதிரை வராது. வேம்பினை குழித்தைலம் வாங்கி அதில் சீரகத்தை சூரணித்து குழைத்து தின்றால் வாதநோய்கள் தீரும்.

## தேற்றான் தைலம்

193. வாதநோய்கள் மட்டுமல்லாமல் குட்டம், கிரந்தி, சூலை, நரை, திரை தீரும். இன்னுமொரு செய்தி கேட்பாயாக. தேற்றானை குழித்தைலம் வாங்கி அதில் தேற்றான் கொட்டையை சூரணம் செய்து குழைத்து உண்டு வர வியாதிகள் எல்லாம் திடுக்கிட்டு இருந்த விடத்தை விட்டு விலகி ஓடும்.

## வாலுளுவைத்தைலம் - பிராயன்தைலம்

194. வாலுளுவை அரிசியை குழித்தைலம் வாங்கி ஒரு மண்டலம் முறைப்படி உண்டுவர நோய்கள் விலகி ஓடும். பிராயன்பட்டையை குழித்தைலம் வாங்கி முறைப்படி உண்டுவர அரையாப்பு, குஷ்டம், பல்பிளவு ஆகிய தீமையான நோய்கள் எல்லாம் விலகும்.

## வெண்புரசு தைலம் - வெள்வேல் தைலம்

195. வெண்புரசு வேர் மற்றும் பட்டையை குழித்தைலம் வாங்கி ஒரு மண்டலம் உண்டுவர குட்டங்கள் தீரும். அதுபோலவே வெள்வேலை குழித்தைலம் வாங்கி உட்கொண்டுவர பல்வலி தீரும்.

## கருஞ்சீரக தைலம்

196. கருஞ்சீரகத்தின் அளவுக்கு பத்துக்கு ஒன்று கந்தகம் சேர்த்து குழித்தைலம் எடுக்கவும். சிரங்கு, குட்டம், வாதம், சூலை, சீழ், மற்றும் சலம் வடியும் கரப்பான், தோல் உரியும் தழுதனை நோயும் தீரும்.

Koviloor Digital Library



## அமுக்கிரா தைலம்

197. இன்னுமொரு முக்கிய செய்முறையை கேட்பாயாக. அமுக்கிராவை குழித்தைலம் எடுத்து அதில் அமுக்கிராவேரை சூரணித்து குழைத்து உண்டுவரவும். ஒரு மண்டலம் உண்ண சூலை, கிரந்தி, குட்டம் மற்றும் நீங்காத வியாதிகள் பலவும் தீரும்.

## சீனப்பா தைலம் - ஓமத் தைலம்

198. சீனப்பா என்னும் பரங்கிப்பட்டையை குழித்தைலம் எடுத்து அதில் பரங்கிப்பட்டையை சூரணித்து குழைத்து உண்டுவர சூலைவகை 18ம் தவறாது விலகும். மயிலின் கண்களைப் போன்ற விழியைப் பெற்ற பெண்ணே! இன்னுமொரு ஆச்சரியமான தைலத்தைக் கூறுகிறேன் கேட்பாயாக. ஓமம், வசம்பு, கார்போக அரிசி ஆகிய மூன்றையும் சம அளவாக எடுத்து குழித்தைலம் எடுக்கவும். அதில் முன்பு கூறிய மூன்று சரக்குகளையும் சமஅளவு எடுத்து சூரணம் செய்து குழைத்து உண்ணவும்.

## சாரணைவேர் குழித்தைலம்

199. வியாதிகள் எல்லாம் தீருவதற்கு இத்தகைய முறையை கூறுகிறேன் கேட்பாயாக. மேற்கூறியபடி மூன்று சரக்குகளை பொடித்து தைலத்தில் குழைத்து உண்டுவர, கிரந்தி, குட்டம், தீரும். சன்னிநோய்கள், வாதநோய்கள் விலகும். இன்னொரு வகை முறையைக் கூறுகிறேன் கேட்பாயாக. சாரணைவேரை குழித்தைலம் எடுத்துக் கொள்ளவும்.

200. சாரணைவேரை இடித்து குழித்தைலமாக வாங்கியபின்பு சாரணைவேரை சூரணம் செய்து குழைத்து உண்டுவர தீரும் நோய்களைக் கேட்பாயாக. வாத நோய்கள், வாய்வு, மலபேதம் தீரும். இத்தனை வகையான தைல முறைகளை கூறினேன். இனி இறுதியாக வெண்தோன்றிக் குழித்தைல முறையை கூறுகிறேன்.

## வெண்தோன்றி குழித்தைலம்

201. வெண்தோன்றி கிழங்கு எடுத்து நிழலில் உலர்த்தி அதனை குழித்தைலம் வாங்கவும். அத்தைலத்தில் வெண்தோன்றி விதைச் சூரணத்தைக் குழைத்து உண்ண குட்டம் 18 வகையும் தீரும். ஒரு மண்டலத்தில் காயசித்தி உண்டாகும். ஒரு வருடம்

Koviloor Digital Library



உட்கொண்டால் சஞ்சீவியாக வாழலாம். சகல சித்திகளும் கைகூடும்.

202. கிடைத்தற்கரிதான சஞ்சீவி போலுள்ள இந்த நூலை எடுத்துக் கூறினேன். சண்டாளப் பாவிகளுக்கு இந்த முறையைக் கூற வேண்டாம். நஞ்சுபோல் இருந்து கொடிய நோய்களைக் கொல்லும் முறைகளை உள்ளடக்கியது இந்த நூல். உலகில் உள்ள சிலர் கெஞ்சிக் கேட்டாலும் எளிதில் கொடுக்கக் கூடாது. கேள்விகள் கேட்காமல், அதிகமாக உபசாரம் செய்தும், தொண்டு செய்தும், அதிக பணம் கொடுத்தாலும் கெட்டவர்களுக்கு இந்நூலை தரக்கூடாது.

203. இன்னொரு முக்கிய செய்தியை கேட்பாயாக. செந்தூரத்தை செய்து லேகியத்துடன் கூட்டியோ அல்லது அதற்குரிய அனுபானங்களை அறிந்தோ, குடிநீருடன் கொடுத்து விஷயம் தெரிந்து வைத்தியன் தொழில் புரிவான். சூரியன் முன் பனி நீங்குவது போல பல பிணிகளும் நீங்கிவிடும்.

204. இந்த நூலில் உள்ள இருநூற்றி ஐந்து பாடல்களையும் இவ்வுலகில் உள்ளவர்கள் பிழைக்க வேண்டும் என்பதற்காகக் கூறினேன். தாயிருக்கும்பொழுது பிள்ளைகள் மகிழ்ச்சியாயிருப்பது போல இதனை எல்லாம் உங்களுக்குக் கூறினேன். மருந்துச் சரக்குகளை எல்லாம் நீற்றிக்கொண்டு அத்துடன் எண்ணெய் வகைகள், நெய்வகைகள் செய்து அதற்கு அனுபானமாக வைத்துக் கொண்டு வைத்தியம் செய்ய வேண்டும்.

205. இப்பூவுலகில் உள்ளவர்களுக்காக மனமிறங்கி இந்த நூலை முன்பு கூறிய நூல்களுக்கு எல்லாம் சுதந்திரமாக உரைத்தேன். லோக மாரணம் செய்து வைத்தியம் பார்க்க வேண்டும். அதற்காகவே கூறிய இந்த வைத்திய பூரணம் இருநூற்றி ஐந்தும் முற்றியது.

## அகத்தியர் திருவாய் மலர்ந்தருளிய
## வைத்திய பூரணம் 205

முற்றிற்று

Koviloor Digital Library

உ

## உரைநடைப் பகுதி

## அகஸ்தியர் திருவாய் மலர்ந்தருளிய

# அகத்தியர் வைத்திய பூரணம் 205க்கு சூத்திர சருக்கம் 21

1. நவலோக மாரணத்தைக் கேட்பாயாக! வைத்தியம் இருநூற்று ஐந்தில் தேள்கொட்டுவது போல் இந்த சூத்திரம் அமையும். இரும்பை அரிதாரமும், கெந்தகமும் கொல்லும். வெள்ளி, கருவங்கம், வெள்வங்கம் ஆகியவற்றை அரிதாரம், வெடியுப்பு, வெள்ளைபாடாணம், சீனாக்காரம் ஆகியவை கொல்லும். செம்பை கெந்தகமும், கருவங்கமும் மடிக்கும். சூதத்தை, துருசு, வெள்ளைபாடாணம், நவச்சாரம் ஆகிய மூன்றும் மடியச்செய்யும்.

## ஏகமூலிகைக்கு பூச மருந்து

2. நவச்சாரம் நாகத்தைக் கொல்லும், தங்கத்தினாலும் நாகம் நீறும், வெங்காரம், அப்பிரகத்தினால் நிமிளை சாகும். பித்தளையும் மடியும். ஏக மூலிகையினால் மருந்தை மடிக்கும் சூட்சுமத்தைக் கேட்பாயாக. வெள்ளைபாடாணம், நவச்சாரம், படிகாரம், பூரம், வீரம், புனுகு, வெடியுப்பு, வெங்காரம், இரசம், பூநீறு, கந்தகம் ஆகியவை எடுக்கவும்.

3. மேற்கூறிய சரக்குகள் அனைத்தையும் சமஅளவாக எடுத்து எலுமிச்சம்பழச்சாறுவிட்டு மைபோல அரைத்து சரக்குக்கு பூசி அதன்பிறகு பச்சிலையை அரைத்து கவசமிட்டு புடமிட சரக்குகள் நீறும். முறையான வைத்தியத்தில் ஒன்றும் பொய்யாகாது. துருசு பற்பம் கூடச் சேர்த்து வைத்தியம் செய்தால் அதுவே அச்சாணி போன்றது.

Koviloor Digital Library



## சவுரிவேர்த் தைலம்

4. வைத்தியம் 205ல் கூறிய தைலங்களில் சேர்க்க வேண்டிய கடைச்சரக்குகளை சூட்சுமமாக இந்த நூலில் கூறியுள்ளேன். சவுரிவேர் தைலத்துக்கு அதிவிடையம், கருஞ்சீரகம், மரமஞ்சள் ஆகியவற்றை வகைக்கு அரைப்பலம் எடுத்து சூரணம்செய்து எண்ணெயில் போட்டு காய்ச்சவும். அதுபோலவே வில்வவேர் தைலத்துக்கு கடுக்காய், கஸ்தூரிமஞ்சள், ஏலம், சந்தனம் சேர்க்கவும்.

5. முன்பு கூறிய சரக்குகளை வகைக்கு அரைபலம் (17½ கிராம்) சேர்த்துக் காய்ச்சவும். வேங்கைத் தைலத்துக்கு மிளகு, பூண்டு, சீரகம், விலாமிச்சம் வேர் வகைக்கு ½ பலம் எடுத்து அரைத்துப் போட்டுக் காய்ச்சவும். வெட்டிவேர் தைலத்துக்கு அதிமதுரம், கருஞ்சீரகம், தேவதாரம், கடுக்காய் வகைக்கு அரைப்பலம் எடுத்து அரைத்து சேர்த்துக் காய்ச்சவும்.

## வேம்புத் தைலத்துக்கு போடும் மருந்து

6. வேம்புத் தைலத்துக்கு ஏலம், இலந்தைவேர், பழம்பாசி, அக்ரகாரம் ஆகியவை வகைக்கு அரைப்பலம் எடுத்து அரைத்துப்போட்டுக் காய்ச்சவும். குருந்தொட்டித் தைலத்துக்கு சுக்கு மற்றும் ஏலம் ஆகியவற்றை வகைக்கு அரைப்பலம் எடுத்து அரைத்துச் சேர்க்கவும்.

7. கொடிவேலி தைலத்துக்கு கருஞ்சீரகம், நற்சீரகம், தாளிசப்பத்திரி, தான்றிக்காய் வகைக்கு அரைப்பலம் எடுத்து சேர்த்துக் காய்ச்சவும். சீரகத் தைலத்துக்கு கார்போக அரிசி, கற்கண்டு, மிளகு, கறிவேப்பிலை ஈர்க்கு ஆகியவை வகைக்கு அரைப்பலம் எடுத்து அரைத்துச் சேர்க்கவும்.

8. சூரிவேர் தைலத்துக்கு சுக்கு, வேப்பம்பிசின், உசிலம்பிசின் ஆகியவை வகைக்கு அரைப்பலம் எடுத்து காடிவிட்டு அரைத்துப் போட்டுக் காய்ச்சவும். இத்தைலம் சிறப்பாக அமையும்.

9. கீழ்க்காய் நெல்லி தைலத்துக்கு பூமி சர்க்கரைவேர், கடுக்காய், வேப்பம்பிசின் ஆகியவை வகைக்கு ஒரு பலம் எடுத்து காடிவிட்டு அரைத்துப் போட்டு காய்ச்சி சட்டியில் வடிக்கவும்.

Koviloor Digital Library



10. சங்கம்வேர் தைலத்துக்கு மிளகு, கருங்சீரகம், ஏலம், மாச்சக்காய் ஆகியவை வகைக்கு ஒரு பலம் எடுத்துக் கூட்டி அரைத்துக் கலந்து காய்ச்சவும்.

11. அமுக்கிராவேர் தைலத்துக்கு காடி, எலுமிச்சம் பழச்சாறு, நொச்சிச்சாறு, எடுக்கம்பூச்சாறு ஆகியவை வகைக்கு கால்படிச்சாறுவிட்டு கிண்டி காய்ச்சி வடிக்கவும். இத்தைல பாகத்தினை மற்றவர்க்கு எளிதில் கூறிவிடாதே.

12. இஞ்சித் தைலத்துக்கு நொச்சிச்சாறு பசுவின்பால் ஆகியவை வகைக்கு அரைப்படி விட்டு எண்ணெயில் கலந்து காய்ச்சிக்கொள்ளவும். மதி கெட்டவர்களுக்கு இப்பாகம் தெரியாது. புத்தி கூர்மையுள்ளவர்களுக்கு இந்நூல் கிட்டும். எண்ணிக்கையில்லா தைலம் காய்ச்சுவானே.

13. செம்முள்ளி தைலத்துக்கு கருஞ்சீரகம், கற்றாழை வேர், கார்போக அரிசி, ஆகியவை வகைக்கு அரைப்பலம் அரைத்து தைலத்தில் சேர்த்து மெழுகுபதமாகக் காய்ச்சி பாத்திரத்தில் வடிகட்டவும்.

14. இருவேலி தைலத்துக்கு பழச்சாறு, கரிசாலைச்சாறு, தாளிச்சாறு வகைக்கு கால்படி சேர்த்து எண்ணெயில் கலந்து சிறுதீயாக எரித்துக் காய்ச்சி வடிக்கவும்.

15. கரிசாலைத் தைலத்துக்கு கற்றாழைச்சாறு, நெல்லிக்காய் சாறு வகைக்கு கால்படியும், கஸ்தூரி மஞ்சள், சாதிக்காய் வகைக்கு அரைப்பலம் சேர்த்து அரைத்து எண்ணெயில் கலந்து அடுப்பேற்றி நன்கு காய்ச்சி வடிகட்டவும்.

16. அகில்கட்டைத் தைலத்துக்கு அதிமதுரம், தான்றிக்காய் வகைக்கு ஒரு பலம் எடுத்து அரைத்துச் சேர்த்துக் காய்ச்சவும். அருகம்வேர் தைலத்துக்கு கோரைக்கிழங்கு, அமுக்கிரா, பூமிச்சர்க்கரைகிழங்கு ஆகிய இம்மூன்றையும் வகைக்கு கால்பலம் (8½ gm) எடுக்கவும்.

17. மேற்கூறிய சரக்குகளை கல்வத்திலாட்டி எண்ணெயில் சேர்த்துக் காய்ச்சவும். கொடுப்பை என்ற பொன்னாங்கண்ணி தைலத்துக்கு அதிமதுரம், கருங்சீரகம், செங்கழுநீர்கிழங்கு, கோஷ்டம் ஆகியவற்றை வகைக்கு ஒரு பலம் எடுத்து அரைத்துச் சேர்க்கவும்.

18. சென்னாகரப் பட்டைத் தைலத்துக்கு கேட்பாயாக. சொன்னாகரப் பட்டைத் தைலத்துக்கு வேப்பெண்ணெய் ஒரு படி, வசம்பு, வெள்ளுள்ளி (பூண்டு), வெள்ளைச் சாரணைவேர் ஆகியவை

Koviloor Digital Library

KOVILOOR LIBRARY A. No. 44794



வகைக்கு ஒரு பலம் எடுத்து அரைத்த கற்கம் ஆகியவற்றை சேர்த்து அடுப்பிலேற்றி சிறு தீயாக எரித்து காய்ச்சி வடிகட்டவும்.

19. அபின் தைலத்துக்கு சங்கம் இலையும், கற்றாழையும் இடித்த சாறு வகைக்கு கால்படி தைலத்தில் சேர்த்துக் காய்ச்சவும். இருப்பவேல் தயிலத்துக்கு, கறிமஞ்சள், கஸ்தூரி மஞ்சள் ஆகியவை சேர்த்து மெழுகு பதத்தில் காய்ச்சி வடிக்கவும்.

20. மேற்கூறிய மஞ்சள் இரண்டு வகையையும் வகைக்கு ஒரு பலம் எடுத்து அரைத்து சேர்க்கவும். இந்த எண்ணெயைக் காய்ச்சி மூழ்கிவர சகல பிணிகளும் தீரும். எண்ணெயை தலைக்கு தேய்த்து மூழ்கும் போது போகம் தவிர்க்கவும். பெரிய வைத்தியர்கள் இந்த முறையை செய்து வைத்தியத்தில் புகழ் பெற்றனர்.

21. பற்பம் முதல் தைல முறைகளின் பாகம் (செய்முறையை) கூறினேன். வைத்திய பூரணம் இருநூற்றி ஐந்தில் இந்த செய்முறை பாகத்தை செய்து கடைபிடித்து வந்தால் இதற்கு ஈடான வைத்தியம் கிடையாது. இந்த சுருக்க நூலை தெரிந்து கொண்டவனே வைத்தியத்தில் தேர்ச்சி பெற்றவனாவான். அதனால் இந்த இருபத்தியோரு பாடல்களை வெளியாகக் கூறினேன்.

## வெண்பா

வங்கம் செம்பொன்னுக்காகும்; ஈயம் வெள்ளிக்காகும்;
லிங்கம் இரும்புக்காகும்; தங்கத்தை தாரம் கொன்றுவிடும்;
செம்பை கெந்தி கொன்றுவிடும். தெரிந்து கொள்வாயாக.

## அகத்தியர் வைத்திய சூத்திரம் சுருக்கம் 21

முற்றிற்று

பெரிய குளம் தென்கரை கோபாலய்யர் குமாரர் வைத்தியம்
திருவேங்கடராமானுஜ அய்யர் அவர்களிடமிருந்து வாங்கிய
ஓலை ஏட்டின் பிரதிபடி இந்த வைத்திய சாத்திரம் அச்சிடலானது.

